மலை-குகைகள்-தீர்த்தங்கள் — 34-1
திருவண்ணாமலைத் தல விளக்கம்

# வேண்டுகோள்

ஈடு இணையற்ற பெருமை வாய்ந்த இந்த ஆலயத்தில் வடக்கு, தெற்கு இராஜகோபுர திருப்பணி வேலைகள் பூர்த்தியானதையடுத்து குடமுழுக்கு விழா நடத்தவும், திருக்கார்த்திகை தீப "தெப்பல்" திருப்பணி வேலை துவங்கப்பட்டு வருகிறது. குறைந்தது ஐம்பது லட்சம் ரூபாய் செலவு ஏற்படும் என மதிப்பிட்டுள்ளனர். ஆலயத்தின் குறைந்த வருமானத்திலிருந்து இந்த பெருந்தொகைகளை செலவிடுவதென்பது இயலாத காரியம். எனவே பக்தகோடிகள் பெருந்தொகைகளை உவந்தளித்தல் வேண்டும். நாட்டில் நிகழும் பல்வேறு காரியங்களுக்கு பொதுமக்கள் ஆயிரக்கணக்கில் காணிக்கை வழங்கும் காலமிது. கோயில் திருப்பணி எத்துணை சிறப்பு வாய்ந்தது, எத்துணைப் பயனுடையது என்பதை விளக்கத் தேவையில்லை. அறநெறியினின்றும் வழுவாமல் மக்களை நிலைநிறுத்தவும், ஆன்மிகத்தை வளர்க்கவும் ஆலயங்களைப்போல் சாலச்சிறந்த சாதனம் வேறில்லை என்பது யாவரும் அறிந்த உண்மை. நம் முன் நிற்கும் இப்புனிதப் பணி இனிது நிறைவேற பக்தர்கள் தங்கள் காணிக்கைகளை பணவிடை, வங்கி பண உண்டியல் (அ) வங்கி காசோலை மூலமாக வழங்கி ஆலயத்தின் வளர்ச்சிப்பணிக்கு உதவிப் பயனடையுமாறு வேண்டுகிறோம்.

நாட்டுக்கோட்டை நகரத்தார் மிகமிகப் போற்றி வழிபடும் இத் திருவண்ணாமலை ஆலயம் அவர்களுடைய வள்ளன்மையால் பெரிதும் வளம் பெற்றுள்ளதற்கு இவ்வாலயத்தின் விலை மதிக்க முடியாத எண்ணற்ற ஆபரணங்களும் வியப்பூட்டும் வண்ணம் அமைந்துள்ள பற்பல வாகனங்களும் இதற்கு சான்று.

எனவே வழக்கம்போல் தனவணிகப் பெருமக்கள் பெருந்தொகை களை அளித்து அண்ணாமலையான் அருளைப்பெற வேண்டுகிறோம். இதைக் கண்ணுறும் பொதுமக்கள் யாவரும் தம்மால் இயன்றளவு இந்த நற்பணிக்கு காணிக்கை வழங்கி இறையருளுக்குப் பாத்திர ராகும்படி கேட்டுக்கொள்கின்றோம்.

**கி. வாசுதேவன்**
உதவி ஆணையர் /
செயல் அலுவலர்

**வே. சொரிமுத்து** B.A.B.L.
தக்கார் /
துணை ஆணையர்

# முன்னுரை

*அண்ணா மலைஎம் அண்ணா போற்றி*
*கண்ணார் அமுதக் கடலே போற்றி*

சிவலோகம், அருணாசலம், சோணாசலம் என்று இன்னோரன்ன திருப்பெயர்களை உடையதும், "பஞ்சாட்சரத்தில் உயர்ந்த மந்திரமில்லை அருணாசலத்தில் உயர்ந்த க்ஷேத்திர மில்லை" எனப்படுவதும், அரியும் அயனும் அறியவொண்ணா அனற்பிழம்பாய் நின்று அகந்தையை அழித்ததும், "குன்றில் கார்த்திகை விளக்கிட்டன்ன" என்று சீவகசிந்தாமணி செப்புவதும், "பரஞ்சுடர் மலைக்கண் கருந்தடங்கண்ணி காணுபு வீளைக்கும் கார்த்திகை விளக்கைமானப் பெரீஇ!!" என்று சங்கப் புலவர் பொய்கையார் புகழ்வதும், "கார்த்திகை விளக்கீடு காணாதே போதியோ பூம்பாவாய்" எனத் திருஞானசம்பந்தர் திருவாய் மலர்ந்தது மான திருவண்ணாமலை மூர்த்தி தலம் தீர்த்தம் ஆகியவற்றால் சிறப்புடையது.

மாபெரும் பேறு பெற்ற இப்புண்ணிய தலத்தின் பெருமைகளைப் புகழும் புராணம், மாலை, கலம்பகம், தேவாரம், திருவாசகம் ஆகியவைகள் உள. எனினும் அவற்றை யெல்லாம் அமைதியுள்ளத்துடன் பயிலும் பண்பு குறைந்து வருகிறது. எதனையும் எளிதில் ஈட்டவேண்டும் என்று எண்ணி விரைவு வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் இற்றைநாளில் அள்ள அள்ள குறையாத அழிவற்ற பொருள்கள் நிறைந்த பெட்டியில் திறவுகோலாக திருவண்ணாமலை தலவிளக்கம் என்ற இந்நூல் விளங்குகிறது.

மூர்த்தியின் திருநாமங்கள், தலச்சிறப்புகள், தீர்த்தங்களின் விளக்கங்கள் இலிங்கோற்பவம், அம்பாள் இடப்பாகம் பெற்ற வரலாறு, கிரிவலம், தீப தரிசனம் கண்டோர் கேட்டோர் இருபத்தொரு தலைமுறைக்குப் பேறு பெறுவர் என்ற உண்மை, வச்சிராங்கத பாண்டியன் முத்திபெற்றது, வல்லாள மஹாராஜனுக்கு அண்ணாமலையார் மகனாய் வந்த வரலாறு, குமரவேல் தரிசித்த செய்தி, இத்தலத்தில் திருஞானசம்பந்தர் விரும்பி யிருந்ததையும், பண்ணார் பதிகம் பாடி திருநாவுக்கரசு நாயனார் செய்த உழவாரப் பணியையும், திருவெம்பாவை, திருப்பள்ளியெழுச்சி ஆகியவற்றை மாணிக்கவாசகர் பாடிய செய்தியையும் அருணையில் வாழ்ந்த அருந்தவத்தோர்களையும், பாடும் பணியே பணியாகக்கொண்ட அருணகிரிநாதரின் வரலாறும், இங்கு வாழ்ந்த சித்தர்களையும், மலையின் மாண்புகளையும், இத்தலத்தின் முற்கால ஆட்சிகள், அவைகளைப் பற்றிய கல்வெட்டுக் குறிப்புகளையும், அன்னார் ஆற்றிய அறங்களையும் ஆலய அமைப்பு இந்நாள் நகரம் பற்றிய குறிப்பு அண்ணாமலை நாதருக்கு நாளும் அறம் வளர்க்கும் நகரத்தார் எனும் தனவணிகர்கள் செய்த தருமங்களின் பட்டியலும், திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்து அறக் கட்டளைகளும் நித்திய பூஜை காலங்கள், பஞ்சபருவ விசேஷங்கள், மாத, பிரம் மோற்சவங்கள் விசேஷ உற்சவங்கள் ஆகியவற்றின் அட்டவணையையும் கொண்டு மிகச் சிறப்பாக சுருக்கமாக கற்றோரும் மற்றோரும் எளிதில் உணரும் வண்ணம் உள்ளது.

இத்தகைய சீரிய சிறிய நூலை ஆலய நிர்வாகம் மிக முனைந்து திருக்கோயில் வெளியீடாக வெளியிட்டிருப்பதற்கு தமிழகம் நன்றி கடப்பாடுடையது.

*ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே*
*செல்லும் வாயெல்லாம் செயல்.*

இப்படிக்கு

சண்முகசுந்தரம் நிலையம்,
திருவண்ணாமலை,

புலவர் சண்முக அருணாசலம்,
தமிழாசிரியர்,
நகராட்சி ஆண்கள் மேல்நிலைப்பள்ளி

உ

சிவமயம்

# திருவண்ணாமலைத் தல விளக்கம்

வெளியீடு :

அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்

திருவண்ணாமலை, தி.ச. மாவட்டம்.



எட்டாம் பதிப்பு



1994

விலை ரூபாய் 5.00

# உள்ளுரை

# வேண்டுகோள்

ஈடு இணையற்ற பெருமை வாய்ந்த இந்த ஆலயத்தில் குடமுழுக்கு நடந்து பதினேழு ஆண்டுகளாகின்றன. இவ்வாலயத்தின் வடக்கு இராஜகோபுரத்தில் திருப்பணி வேலை துவங்கப்பட்டு தற்போது பூர்த்தியாகும் நிலையில் உள்ளது. தவிர திருக்கார்த்திகை தீப "தெப்பல்" திருப்பணி வேலையும் துவங்கப்பட்டு வருகிறது. குறைந்தது ஐந்து லட்சம் ரூபாய் செலவில் இவைகளை செய்ய திட்டமிடப்பட்டுள்ளது. ஆலயத்தின் குறைந்த வருமானத்திலிருந்து இந்த பெருந் தொகைகளை செலவிடுவதென்பது இயலாத காரியம். எனவே பக்தகோடிகள் பெருந்தொகைகளை உவந்தளித்தல் வேண்டும். நாட்டில் நிகழும் பல்வேறு காரியங்களுக்கு பொதுமக்கள் ஆயிரக்கணக்கில் காணிக்கை வழங்கும் காலமிது. கோயில் திருப்பணி எத்துணை சிறப்பு வாய்ந்தது. எத்துணைப் பயனுடையது, என்பதை விளக்கத் தேவையில்லை. அறநெறியினின்றும் வழுவாமல் மக்களை நிலை நிறுத்தவும், ஆன்மிகத்தை வளர்க்கவும் ஆலயங்களைப் போல் சாலச்சிறந்த சாதனம் வேறில்லை என்பது யாவரும் அறிந்த உண்மை. நம் முன் நிற்கும் இப்புனிதப் பணி இனிது நிறைவேற பக்தர்கள் தங்கள் காணிக்கைகளை பணவிடை, வங்கி பண உண்டியல் (அ) வங்கி காசோலை மூலமாக வழங்கி ஆலயத்தின் வளர்ச்சிப்பணிக்கு உதவிப் பயனடையுமாறு வேண்டுகிறோம்.

நாட்டுக்கோட்டை நகரத்தார் மிகமிகப் போற்றி வழிபடும் இத் திருவண்ணாமலை ஆலயம் அவர்களுடைய வள்ளன்மையால் பெரிதும் வளம் பெற்றுள்ளதற்கு இவ்வாலயத்தின் விலை மதிக்க முடியாத எண்ணற்ற ஆபரணங்களும் வியப்பூட்டும் வண்ணம் அமைந்துள்ள பற்பல வாகனங்களும் இதற்கு சான்று.

எனவே வழக்கம்போல் தனவணிகப் பெருமக்கள் பெருந்தொகைகளை அளித்து அண்ணாமலையான் அருளைப் பெற வேண்டுகிறோம். இதைக் கண்ணுறும் பொதுமக்கள் யாவரும் தம்மால் இயன்றளவு இந் நற்பணிக்கு காணிக்கை வழங்கி இறையருளுக்குப் பாத்திரராகும்படி கேட்டுக் கொள்ளுகின்றோம்.

நிர்வாகம்



அருள்மிகு அருணாசலேஸ்வரர்



அருள்மிகு உண்ணாமுலையம்மன்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவண்ணாமலைத் தல விளக்கம்

உண்ணாமலை உமையாளொடும்
உடன் ஆகிய ஒருவன்
பெண் ஆகிய பெருமான்மலை
திருமாமணி திகழ
மண் ஆர்ந்தன அருவித்திரள்
மழலைம்முழவு அதிரும்
அண்ணாமலை தொழுவார்வினை
வழுவாவண்ணம் அறுமே.

— *திருஞான சம்பந்தர்.*

## 1. தலத் திருநாமங்கள்

*இப்பிரசித்தித் தலம் முத்திபுரி, தலேச்சுரம், சிவலோகம், சுத்த நகரம், கௌரி நகரம், சோணாசலம், சோணகிரி, சோணாத்ரி, அருணாசலம், அருணகிரி, அருணாத்ரி, அனற்கிரி, திருவருணை,*

*திருவண்ணாமலை என்னும் பல திருநாமங்களைத் தாங்கி விளங்குகின்றது. இதற்கு ஞான நகரம் என்ற விசேடமான பெயரும் உண்டு.*

## 2. தலச் சிறப்பு

*இத்தலம், ஆறு ஆதாரத் தலங்களுள் மணி பூரகத் தலமாகவும், பஞ்சபூதத் தலங்களுள் நடு நாயகமான அக்நித் தலமாகவும், முத்தித் தலங்கள் நான்கனுள் நினைத்த மாத்திரத்தில் முத்தி நல்க வல்லதாகவும், நடு நாட்டுச் சிவத் தலங்கள் இருபத்திரண்டனுள் சிறப்புடைய ஒன்றாகவும், மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாகப் பொருந்தியதாகவும், ஞானத் தபோ தனர்க்கு உறைவிடமாகவும் அமைந்துள்ளது.*

*மஹா சிவராத்திரியின் தோற்றுவாய் கொண்டதும், தேவிக்கு இடப்பாகம் அளித்ததும் இத்தலத்தின் தனிப் பெருஞ் சிறப்புகளாகும்.*

"ஆதி நெடுமால் அயன்காண அன்றுபரஞ்
சோதிச் செழுஞ்சுடராய்த் தோன்றுமலை - வேதம்
முழங்குமலை சிந்திப்பார் முன்னின்று முத்தி
வழங்குமலை அண்ணா மலை"
"சத்திக்கு ஒருபாகம் தான்கொடுத்து நின்றமலை
முத்திக்கு வித்தாய் முளைத்தமலை - எத்திசையும்
போற்றுமலை போற்றிப் புகழ்வார் எழுபிறப்பை
மாற்றுமலை அண்ணா மலை".

*— குரு நமசிவாயர்.*

இன்னும் இருக் வேதம், அதர்வண வேதம் சரப உபநிடதம், சூதசங்கிதை, உருத்திர சங்கிதை, பாஸ்கர சங்கிதை, சிவ மஹா புராணம், சிவ ரஹஸ்யம், கந்த புராணம், பெரிய புராணம், அருணாசல புராணம் தேவாரம், திருவாசகம், திருப்புகழ் முதலிய அரிய நூல்கள் இத்தலத்தின் வியத்தகு மாண்பினை விரித்துரைக்கும்.

## 3. மூர்த்தி திருநாமங்கள்

இங்கு கோயில் கொண்டருளும் மூர்த்தியின் திருப்பெயர்கள் புராணங்களில் பலவாகக் கூறப் பெற்றுள்ளன. அவை : திருவண்ணாமலை ஆண்டார், திருவண்ணாமலை மகா தேவர், திருவண்ணாமலை ஆழ்வார், அண்ணா நாட்டு உடையார், திருவண்ணா மலை உடையார், அபிநயபுசங்கராசர், பரிமள வசந்தராயர், புழுகணி இறைவர். பிரசித்தமாக விளங்குவது :- "ஸ்ரீ அருணாசலேசுவரர்", "ஸ்ரீ அண்ணாமலையார்".

தேவியின் திருநாமம் : - "ஸ்ரீ அபீத குசநாயகி" "ஸ்ரீ உண்ணாமுலை யம்மை" "உண்ணாமுலை நாச்சியார்", "திருக் காமகோட்டமுடைய நம்பிராட் டியார்", "உலகுடைய பெருமாள் நம்பிராட்டியார்".

தல விருட்சம் - வகுளம் (மகிழ மரம்)

## 4. இலிங்கோற்பவம்

படைத்தற் கடவுளாகிய பிரமனும், காத்தற்

கடவுளாகிய திருமாலும் தாந் தாமே பெரியரென்று அகங்காரங்கொண்டு தம்முட் பிணக்குற்ற காலை முழு முதற்பொருளாகிய சிவபெருமான் அவர்கள் முன்பாக ஆதியும் அந்தமும் இல்லா அரும்பெரும் ஜோதிப் பிழம்பாகத் தோன்றி, தமது அடியையேனும் முடியையேனும் கண்டு வந்தவர் பெரியராவார் எனத் திருவாய் மலர்ந்தருளலும், திருமகள் மார்பன் வராக வடிவங்கொண்டு ஆழ்ந்து ஆழ்ந்து குடைந்து சென்றும், "பாதாளம் ஏழினும் கீழ் சொற்கழிவு பாதமலர்" காண இயலாது சோர்ந்து திரும்பினார். அன்ன உருத்தாங்கி ஆகாயத்தே உயர உயரப் பறந்தும், "வேதப் பொருள் முடிவாம் போதார் புனைமுடியை" நண்ணுதற்கியலா நான்முகன் தயங்கி நிற்கையில், ஆங்குற்ற தாழம்பூ ஒன்றினைக் கண்டு அதன்பால் தனது விருத்தாந்தத்தை விளம்பினர்.

கங்கைநீர் மல்கும் திங்களார் சடையினின்றும் நழுவிய தான் நாற்பது ஆயிரம் ஆண்டுகளாகக் கீழ்நோக்கி வந்துகொண்டிருப்பதும், "பிறையணி முடியைக் காண்டல் பிரமனே எவர்க்கும் ஆகா" எனவும் தாழம்பூவால் கூறக் கேட்ட பிரமன் தனது முயற்சி விடுத்துத் தனக்காகப் பொய்யுரை யொன்று புகல வேண்டித் தாழை மலரைச் சம்மதிக்கச்செய்து திருமாலிடம் சென்று தாம் சோதி மணி முடி கண்டதாக உரை செயலும், முற்றுணர்ந்த சிவபெருமான் பொய்யுரைசெய்த பிரமனுக்குப் பூலோகத்தில் ஆலயம் அமையாதாவதென்றும், கரவுரை செய்த கைதை (தாழம்பூ) தமக்கு ஆகாதாவதென்றும் சாபமிட்டனர். பங்கயத்தானும், பாம்பணையானும் தங்கள் அகங்கார

*இருள் அகலப்பெற்றவராய் தன்னிகர் இல்லாத் தனிப்பெருஞ் சோதியைப் பரவிப் பணிந்து பிரார்த்திக்க, அவர்களின் பிரார்த்தனைக்கு இரங்கிய பெருமானார் சிவலிங்கத் திருவுருக்கொண்டு அமர்ந்தனர் என்ப. இதனை,*

"என்னிகர் எவரும் இல்லென்று இருவரும் இகலும் எல்லை
அன்னவர் நடுவு தோன்றி அடிமுடி தெரியா தாகி
உன்னினர் தங்கட்கு எல்லாம் ஒல்லையில் முத்தி நல்கித்
தன்னிகர் இன்றி நின்ற தழற்பெருஞ்சைலம் கண்டார்".

*(உற்பத்தி காண்டம் - வழி நடைப் படலம் - 11)*

"அரியும் யானும்முன் தேடும்அவ் அனற்கிரி அனல
கிரியெனும்படி நின்றதால் அவ்வொளி கிளர்ந்த
இரவதே சிவ ராத்திரி யாயினது இறைவற்
பரவி உய்ந்தனர் அன்னதோர் வைகலில் பலரும்"

*(தக்ஷகாண்டம் - அடிமுடி தேடுபடலம் - 96)*

*என கந்தபுராணம் முழங்கும்.*

*இவ் வரலாறே இலிங்கோற்பவத்தின் தோற்ற மாகும். கிருத யுகத்தில் அக்நி மலையாகவும், திரேதா யுகத்தில் மாணிக்க மலையாகவும், துவாபர யுகத்தில் பொன் மலையாகவும், கலியுகத்தில் கல் மலையாகவும் மாறிற்று என்பர். மலைகளை நான்கு வகையாகப்*

பிரித்துப் பேசும் ஜியாலஜி என்னும் நில நூல், இம்மலையை, 'நெருப்பினால் வந்த குன்று' (Igneous Rock) என்று குறிப்பிடுகிறது.

## 5. தேவி இடப் பாகம் பெற்றது

ஓர் கால் உமாதேவியார் விளையாட்டாக எம்பெருமானுடைய திருக்கண்களைப் புதைக்கவே, அக்கணம் பிரபஞ்ச மெங்கணும் பேரிருள் சூழலாயிற்று. அப் பேரிருள் வசப்பட்ட ஜீவகோடி களின் துன்பத்துக்கு ஆற்றாராய், அப் பாபந் தீர்க்க வேண்டித் தேவியார் காஞ்சிமா நகரம் சேர்ந்து பிருத்வியால் இலிங்கம் அமைத்துப் பூசனை புரிந்துவரும் நாளில், பத்தராய்ப் பணிவார்க்குப் பதம் அளிக்கும் பரமன்தோன்றி, "திருவருணையை அடைந்து தவமியற்றித் தமது இடப்பாகம் பெறு" மாறு அருளிச் செய்தனர்.

அவ் வண்ணமே பார்வதி தேவியார் அருணாசலத்தை அடைந்து, பவழக் குன்று மலையில் பர்ணசாலை அமைத்து, கௌதம முனிவரின் உதவியால் கடுந்தவம் புரிந்து வருகையில், ஆசையால் அறிவு அழிந்து அட்டகாசம் புரிந்து நின்ற அசுரர் தலைவனான மகிடாசுரன் என்பானை மர்த்தனம் செய்து, மன்பதை உய்யக் கார்த்திகைத் திங்களில் பெருவிழா நடத்திப் பௌர்ணமியோடு கூடிய கிருத்திகைப் பிரதோஷ காலத்தில் மலைமேல் ஜோதி ஸ்வரூப தரிசனம் கண்டு எல்லையிலாக் களிப்பெய்தி எம்பெருமானாரின் இடப் பாகம் பெற்று அமர்ந்தனர்.

## 6. தீப தரிசனம்

*வருடந்தோறும் இங்கு நடைபெற்றுவரும் திருக் கார்த்திகை தீபப் பெருவிழாவின் பத்தாம் நாளாகிய தீப தரிசன தினத்தன்று, உதயாத் பூர்வ காலத்தில் பரணிதீபமும் பிரதோஷ காலத்தில் அர்த்தநாரீஸ்வர மூர்த்தி எழுந்தருளிக் காட்சி கொடுத்து, அவ்வேளை யில் மலையின் உச்சியில் ஜோதி ஸ்வரூபம் காட்டலும் அதே சமயத்தில் ஆலயத்துள் பஞ்சமூர்த்திகளுக்குத் தீபாராதனை செய்தலும் வழக்கமாக நடைபெற்று வருகின்றன.*

"கார்த்திகைக்குக் கார்த்திகைநாள் ஒருஜோதி
மலைநுனியிற் காட்டா நிற்போம்
வாய்த்த அந்தச் சுடர்காணில் பசிபிணியில்
லாதுஉலகின் மன்னி வாழ்வார்
பார்த்திவர்க்கும் அருந்தவர்க்கும் இடையூறு
தவிரும்அது பணிந்தோர், கண்டோர்
கோத்திரத்தில் இருபத்தோர் தலைமுறைக்கு
முத்திவரம் கொடுப்போம்" என்றார்.

*— அருணாசல புராணம். 159*

## 7. அருணையைத் தரிசித்த அருந்தவத்தோர்

*குமரவேள் தாருகாசுரனை வதம் செய்து தெற்கு நோக்கி எழுந்தருளிய காலத்து, திருவண்ணா*

மலையைத் தரிசித்த வரலாறு, கந்தபுராணத்துள் காணக்கிடக்கின்றது.

திருஞானசம்பந்தப் பெருமான் இப்பதி அடைந்து இரு திருப்பதிகங்கள் பாடித் "தங்கு விருப்பில் வீற்றிருந்தார்" என்பது பெரிய புராணத்தால் அறியலாம்.

திருநாவுக்கரசு சுவாமிகள் இங்கு எழுந்தருளி மூன்று திருப்பதிகங்கள் இயற்றினார். இதனைப் "பண்ணார் பதிகத் தமிழ் பாடிப் பணிந்து பரவிப்பணிசெய்தார்" என்னும் சேக்கிழார் பெருமானின் திருவாக்கால் அறியலாம்.

மாணிக்க வாசகப் பெருந்தகை இத் தலத்தில் பல காலம் தங்கினார் என்பதை "திருவெம்பாவை" "திருவம்மானை" ஆகிய பாமாலைகளும் திருவாசகத்துள் காணப்பெறும் திருவண்ணாமலை பற்றிய ஏராளமான குறிப்புகளும் நன்கு உணர்த்துவதாகும்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள், நக்கீரர், கபிலர், பரணர், பட்டினத்தார் ஆகியவர்களும் திருவண்ணா மலையைத் தரிசித்திருத்தல் கூடுமென்று கருதலாம். அவர்களுடைய பாடல்களில் இத்தலம் பற்றிய குறிப்புகள் நிறையக் காணக்கிடக்கின்றன.

## 8. வச்சிராங்கத பாண்டியன்

இவர் புரவி மீதமர்ந்து வேட்டையாடி வருங்கால் ஒரு புழுகு (புனுகு) பூனையைக்கண்டு அதனைத் துரத்த அப்பூனை அண்ணாமலையினை அடைந்து வலம் வந்து விழுந்து இறந்தது. பாண்டியன் ஏறிவந்த குதிரையும்

கூடவே விழுந்து பட்டது. இரண்டும் உடனே இரு வித்தியாதரர்களாக மாறித் தாங்கள் இருவரும் துர்வாச முனிவரின் சாபத்தால் புழுகு பூனையாகவும் குதிரையாகவும் பிறக்க நேர்ந்ததும், திருவண்ணா மலையினை வலம் வந்த விசேடத்தால் சாபம் நீங்கப் பெற்றதும் கூறினர். இதுகேட்ட பாண்டியன் அர சுரிமையைத் தமது புதல்வனான இரத்தினாங்கதனிடம் ஒப்புவித்துத் தான் அண்ணாமலை நாதருக்கு அழகிய திருப்பணிகள் ஆற்றியும் வலம் வந்தும் தேவேந்திர பதவி பெற்றான் என்று புராணம் கூறும்.

## 9. வல்லாள மஹாராஜன்

இரப்போர்க்கு இல்லையென்னாது வாரி வழங்கும் வள்ளற் கொடியுடைய* வல்லாள மஹா ராஜன் என்னும் மன்னன் திருவண்ணாமலையைத் தலைநகராகக் கொண்டு அறநெறி வழுவாது ஆட்சி செலுத்தி வரும் நாளில், மன்னனது நீதி வழுவா நெறிமுறையின் உறுதியினைச் சோதிக்கத் திருவுளம் கொண்ட அண்ணாமலையண்ணல், அடியவர் வடிவந் தாங்கி அரசவைக்கு எழுந்தருளினார். அடியவர் விஜயத்தால் ஆனந்தப் பெருக்கடைந்த அரசன், அடியார் பாதம் பணிந்து வந்த காரியத்தை உரைத்தருள வேண்டலும்

"..............

உன்னையாம் கருதி வந்தது ஓதுவம்

உருஇல் மாறன்

* இவர் பதினான்காம் நூற்றாண்டினர் என்ப.

பன்னும்ஐங் கணையால் இன்று படுத்திடும்
துயரை மாற்றக்
கன்னியை நல்கில் கீர்த்திகடல் ஏழும்
வழங்கும்'' என்றார்.

— அருணாசல புராணம்.

அரசன் ஏவலாளர்களை அனுப்பி அன்றிரவு அடியவருடன் இருக்கத் தக்க ஓர் கணிகை மாதை அழைத்து வருமாறு பணித்தனன். மங்கையோர்பாகம் கொண்ட மாதேவரின் லீலா விலாசத்தால் அன்றைய தினம் அருணையம்பதியிலுள்ள பரத்தையர் அனைவரும் பிறர் வயப்பட்டிருந்தமையால் அரசன் அழைப்புக்கு இயைந்திலர். அடியவரின் விருப்பம் நிறைவேற்ற இயலாது அரசன் அடைந்துள்ள அளவிலாத் துயரங் கண்ட இளையராணி சல்லமாதேவி என்பவர், அரசன் திருவுளம் கொண்டால் அரசனின் அடைக்கலமான தன்னுடைய சரீரத்தைக் கொண்டு அடியவர்க்களித்த வாக்கை நிலைநிறுத்தலாமென்றனள்; "இல்லை யென்பது இல்லை" என்னும் தமது எழிற்கொடி தாழாதுவழி காட்டிய தன் அருந்துணைவியின் மாண்பினை வியந்து மன்னன் அகமிக மகிழ்ந்து அனுமதியளித்தனன்.

இரவு பஞ்சணை சேர்ந்த சங்கமர், தூங்காமல் தூங்கும் துயிலில் ஆழ்ந்தவராய் இராப் பொழுதின் பெரும் பகுதி கழியவே "வேந்தனா ருரைத்த வாய்மை வீண்பட லாகா" தென்றஞ்சிய அரசியார், அடியவர் துயில் நீக்கும் பொருட்டாக அவரது திருவடிகளைத்

*தீண்டலும் அக்கணம் அடியவரின் திருமேனி உருக்கரந்து பச்சைப் பசுங்குழவியாகிப் பால சூரியன் என விளங்கியது.*

*அரசனும் அரசியும் ஆனந்தப் பெருக்குடையவராய்ப் பிள்ளைக்கலி தீர்க்கப் பெருமானே எழுந்தருளி வந்த தங்கள் பாக்கியத்தை வியந்து குழந்தையை வாரி அணைத்த வேளையில், மார்புறத் தழுவிய மதலை மார்பகத்தே காணாது மாயமாய் மறைந்தது. சதிபதிகள் இருவரும் தங்கள் துர்ப்பாக்கியத்தை நினைந்து வருந்தலும் ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான் ஆகாய வீதியில் வெள்விடைமேல் தோன்றி, "அரசே! உமது பற்றற்ற பக்தி நிலையினை உலகுக்கு உணர்த்தும் பொருட்டாகவே யாம் அடியவர் வேடந்தாங்கி வந்தோம்"*

"நற்புதல்வன் வேண்டும்என நாடியிருந் தாய்உனக்குப்
பொற்புதல்வன் என்னநாம் போந்தனமே; - சொற்
பயன்ஈது
என்ன இனிதே அறம்இயற்றி இப்புவியில்
மன்ன! இனிவாழ்வாய் மகிழ்ந்து"

"மைந்தன் இலைஎன்ற மனக்கவலை தீர்த்திடுவாய்;
அந்தம்உறில் என்தன் அடிஅடைவாய்; - வந்து உனக்கு,
நாம்உத் தரகிரியை நன்குஇயற்றுவோம் என்றான்;
மாமுத்தர் அன்பில் வருவான்"

*- துரைவடிவேலனார்*

இதற்கிணங்க வருடந்தோறும் வல்லாள மஹா ராஜனுக்கு ஈமக்கடன் செய்யும் பொருட்டாக, ஸ்ரீ அண்ணாமலை யண்ணல் மாசி மாத மக நட்சத்திரத்தில் பள்ளிகொண்டா பட்டுக்கு எழுந்தருளி உத்திரகிரியை நடாத்தும் உற்சவம் இன்றும் நடைபெற்று வருகின்றது.

## 10. ஸ்ரீ அருணகிரி நாதர்

திருப்புகழ், கந்தரனுபூதி, கந்தரலங்காரம் கந்தரந்தாதி, திருவகுப்பு முதலியன அருளிச் செய்த செந்தமிழ்ச் சந்தக்கவிராஜரான அருணகிரிநாதர் சரித்திரம் பலவாறாக வழங்கப்பட்டு வருகின்றது. இவருடைய முற்பிறப்பு, தாய் தந்தையர், பருவகால நிகழ்ச்சிகள் குறித்துக் கருத்து மாறுபாடுகள் உள்ளன. எனினும் இம்மஹான் திருவருணையில் அவதரித்தவ ரென்பதும், முருகப் பெருமானுடைய திருவருட் கடாட்சம் பெற்றுப் பல பாடல்களை இயற்றின ரென்பதும் யாவரும் ஒப்ப முடிந்த ஒன்றாகும்.

இவருடைய காலம் பதினைந்தாவது நூற்றாண் டின் மத்திய பகுதி என்பது திருவண்ணாமலையில் அரசு புரிந்த பிரபுடதேவமாராயர் காலத்தில் ஆஸ்தான கவிஞராயிருந்த சம்பந்தாண்டான் என்னும் தேவி உபாசகருடன் வாதிட்டு வென்ற நிகழ்ச்சியைக் கொண்டு அறியலாம்.

வாழ்க்கையில் சலிப்பெய்தி அறுமுகப் பெருமானின் அருட்பேற்றை நாடித் தவங்கிடந்தும் அவனருள் பெறாமையால், அருணகிரிநாதர் இவ்வால யத்தின் ஓங்கி வளர்ந்த கோபுரங்களுள் ஒன்றாகிய

வல்லாள மஹாராஜன் கோபுரத்தின் மீதேறித் தன்னை அர்ப்பணித்துக் கொள்ளும் வேளையில் முருகவேள் தோன்றி அருணகிரி நாதரை ஆட்கொண்டருளித் தம்மைப் "பாடும் பணியே பணியா"கச் செய்துவரக் கட்டளை யிட்டனர் என்ப.

வேலவர் தாமே "முத்தைத் தரு" என அடி யெடுத்துக் கொடுத்து தீட்சை செய்த வரலாறும், தலங்கள் தோறும் யாத்திரை சென்று அற்புதத் திருப் பாடல்கள் இயற்றிய வரலாறும்; பிரபுடதேவமாராயருக்கு கம்பத்தில் கந்தவேளின் காட்சி காட்டிய வரலாறும் இவருடைய தனிச் சரித்திர வரலாறுகளில் விரிவாகக் காணத்தகும்.

## 11. குகை நமசிவாயர் - குருநமசிவாயர்

சில நூற்றாண்டுகட்கு முன் இப் பகுதியில் குகை நமசிவாயர் என்ற திருநாமம் பெற்ற சைவப்பெரியார் அற்புதமான சித்திகள் பெற்று விளங்கினார்.

இவருடைய சீடர், குரு நமசிவாயர். இவர் தாம் இருந்த விடத்திருந்தே ஞானக்கண்ணால் பல காட்சிகள் காணும் திறமை மிக்கவராயிருந்தார். தமது குரு தேவரின் ஆக்ஞையைச் சிரமேற்கொண்டு தில்லைத் தலம் சேர்ந்து, ஆனந்தக் கூத்தருக்கு அழகிய திருப்பணிகள் ஆற்றிக் கட்டளைகள் பலவும் ஏற்படுத்தினார்.

## 12. திருவண்ணாமலை நகரம்

இந்நகர், திருவண்ணாமலை சம்புவராயர் மாவட் டத் தலைநகராகும். (இத்தாலுகா 1911ஆம் வருடம்

வரையில் தென்னாற்காடு ஜில்லாவில் சேர்ந்திருந்தது). விழுப்புரம், காட்பாடி இருப்புப் பாதை மார்க்கத்தில்,. விழுப்புரத்திலிருந்து 42ஆவது மைலிலும் காட்பாடியிலிருந்து 58ஆவது மைலிலும் உள்ளது. சென்னை, பெங்களூர், சிதம்பரம், சேலம், பாண்டிச்சேரி, வேலூர், காஞ்சிபுரம், திருச்சிராப்பள்ளி, கடலூர் முதலான நகரங்களிலிருந்து நேரான பஸ் மார்க்கங்களும் உள்ளன.

இந்நகரம் முதல்நிலை நகர சபை (I Grade Municipality) யாக அரசாங்கத்தாரால் ஏற்கப்பட்டுள்ளது. நகர சபையாரின் கணிதப்படி இந் நகர் வாழ் மக்களின் தொகை சுமார் 300,000 ஆகும்.

இங்கு மாவட்ட ஆட்சித் தலைவர் அலுவலகம் மற்றும் முன்ஸீப் கோர்ட், சர்க்கார் கஜானா, டெலிபோன் எக்சேஞ்சு நிலையம் ஆகியனவும், அரசினர் தொழிற் பயிற்சி நிலையமும், அரசினர் கலைக் கல்லூரியும், 5 மேல் நிலைப் பள்ளிகளும், 4 நடுத்தரப் பள்ளிகளும் 16 ஆரம்பப் பள்ளிகளும், 1 மகப்பேறு இல்லமும், சர்க்கார் ஆஸ்பத்திரி ஒன்றும், நகராட்சி டிஸ்பென்சரியும் உள்ளன.

## 13. தங்குமிடங்கள்

இந் நகரில் விசேட காலங்களில் வெளியூர்களிலிருந்து வரும் மக்கள் தங்குவதற்கான விடுதிகளும் மடங்களும் நிறைய உள்ளன. ஆலயத்தின் சார்பில் திருக்கோயிலின் அருகாமையிலேயே சேவார்த்திகள்

தங்கும் விடுதிகள் மற்றும் . குடில்கள் கட்டப் பட்டுள்ளன.

முனிஸிபல் நிர்வாகத்தின்கீழ் பிரயாணிகள் விடுதி (Travellers Banglow) ஒன்றும் உளது.

## 14. முற்கால ஆட்சி

இத்தலம் முன்னாளில் சோழ மன்னர்களால் ஆளப்பட்டு வந்ததெனவும், கி.பி. பதினான்காம் நூற்றாண்டில் ஹொய்சள வமிசத்தினர் இந்நகரையே தலைநகராகக் கொண்டு அரசு செலுத்தி வந்தனர் எனவும், பின்னர் விஜய நகர மன்னர்களும், தஞ்சாவூர் நாயக்க மன்னர்களும் ஆண்டு வந்தனர் எனவும் கூறப்படுகின்றது.

பதினேழாம் நூற்றாண்டில் இப்பிரதேசம் கர்நாடக நவாப்பின் ஆளுகைக்கு உட்பட்டது. கி.பி. 1753 முதல் கி.பி. 1760 வரை மிகுந்த குழப்பத்திற் குள்ளாகி, முராரிராயர், கிருஷ்ணராயர், மிருத்திஸ் அலிகான், பாக்கத் உல்லாகான், (பிரெஞ்சு) சூப்பிரே (Soupires) சாபினே (Soubinet), (ஆங்கில காப்டன்) ஸ்டீபன் ஸ்மித் (Captain Stephen Smith) முதலியோர் இந் நகரினை முற்றுகையிட்டு மாறி மாறி வெற்றியும் தோல்வியும் அடைந்தனர். கி.பி. 1790இல் திப்பு சுல்தான் கைக்கு வரலாயிற்று.

பத்தொன்பதாம் நூற்றாண்டின் முற்பகுதியில் இந் நகர் ஆங்கிலேயரின் கைக்கு மாறியது.

## 15. மலை, குகைகள், தீர்த்தங்கள்

இங்கு வானுற ஓங்கி வளம் பெற விளங்கும் மலையினை ஸ்ரீ அண்ணாமலை யண்ணலின் புனிதத் திருவடியாகவே மக்கள் போற்றி வணங்குவர்.

இதன் உச்சி, கடல் மட்டத்திற்குமேல் 2,668 அடி உயரமுள்ளதெனக் கணிக்கப் பெற்றுள்ளது. இதன் நாற்புறமும் நன்கு செப்பனிடப்பெற்ற கப்பி ரோடு அமைந்து கிரிவலம் வருவோர் சிரமமில்லாது இராப்பகல் எந்நேரத்திலும் எளிதில் வரக்கூடியதாக உள்ளது. இதன் சுற்று எட்டு மைல்கள் ஆகும்.

இம் மகிமை மிகு மலையை வலம்வரும் பக்தர்கள் ஆதி வாரத்தில் சிவபதமும், சோம வாரத்தில் தேவேந்திர வாழ்வும், மங்கள வாரத்தில் பிறவிப்பிணி நீங்கிய பெரு வாழ்வும், புத வாரத்தில் தேவராகும் தகுதியும், குரு வாரத்தில் முனிவர்க்கும் மேலான பதவியும், சுக்கிர வாரத்தில் விஷ்ணு பதமும், சனி வாரத்தில் நவக்கிரகப்பலனும் பெறுவர். மேலும், சிவராத்திரி, வருடப்பிறப்பு, ஐப்பசி - மிக விசேடம்.

மலையைச் சுற்றி எண் திசைகளிலும் அஷ்ட லிங்கங்கள், அஷ்ட நந்திகள் ஆகியனவும் முன்நூற் றறுபதுக்கு மேலான தீர்த்தங்களும், பல மண்டபங்களும் ஆச்ரமங்களும் உள்ளன.

மலைப் பிராகாரத்தில், சக்கரதீர்த்தம், அக்நி தீர்த்தம், பாண்டவதீர்த்தம், ஸ்ரீசேஷாத்திரி சுவாமிகள் சமாதி நிலையம், ஸ்ரீ ரமணாச்ரமம், பாலிதீர்த்தம்,

சிம்ம தீர்த்தம், யமதீர்த்தம், சோணநதி, உண்ணா முலைத் தீர்த்தம், வருணதீர்த்தம், கௌதமர் ஆச்ரமம், அடி அண்ணாமலை என வழங்கும் அணி அண்ணா மலை ஆலயம், மாணிக்கவாசகர் ஆலயம், அசுவினி தீர்த்தம், ஸ்ரீஈசான்ய ஞானதேசிகர் சமாதி நிலையம், ஸ்ரீதுர்க்கையம்மன் ஆலயம், அதனுள் கட்கதீர்த்தம், பவளக்குன்று ஆகியவை உள்ளன.

மலையின் மத்திய பாகத்தில் ஸ்ரீ கந்தாச்ரமம் விருபாக்ஷகுகை, குகை நமசிவாயர் ஆலயம், மாமரத்துக் குகை, சடைச்சாமி குகை, அருட்பால்குகை முதலியன வும், பாததீர்த்தம், முலைப்பால் தீர்த்தம் முதலிய தீர்த்தங்களும் உள்ளன.

வருடத்தில் இருமுறை (கார்த்திகை, தை மாதங்களில்) ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான் கிரி வலம் எழுந்தருள்வார்.

அண்ணாமலையை நாடி வந்து தன்னிகரில் சித்தி பெற்ற தவ சிரேஷ்டர்களுக்கு அளவில்லை. அவர்களில் விருபாக்ஷ தேவர், ஈசான்ய ஞானதேசிகர், சேஷாத்திரி சுவாமிகள், ரமணமகரிஷிகள் ஆகியோர் குறிப்பிடத் தக்கோராவர்.

மலையின் மத்திய பாகத்திலும், அடிவாரத்திலும் குகைகள், ஆச்ரமங்கள், தீர்த்தங்கள் நிறைய உள்ளன. அவைகளில் இன்றும் சாதுக்கள் வாசம் செய்து வருகின்றனர்.

## 16. மலையின் மகிமைகள்

*திருவண்ணாமலையின் தன்னிகரற்ற தனிச் சிறப்புக்குக் காரணம், இங்கு ஸ்ரீ அருணாசலப் பெருமான் எழுந்தருளிக் கடாட்சித்து வருவதுதான். இதனை நம் சமயச் சான்றோர்கள் பெரிதும் புகழ்ந்தேத்திக் கூறியுள்ளனர். பிறக்க முக்தி திருவாரூர்; தரிசிக்க முக்தி சிதம்பரம்; இறக்க முக்தி காசி; ஆனால் நினைத்த அளவிலேயே முக்திச் செல்வத்தை முந்தித் தருவது எம் பெருமான் எழுந்தருளிய திருவண்ணாமலைத் திருத்தலமேயாகும்.*

*ஸ்ரீசிவப்பிரகாச சுவாமிகள் அருளிய சோண சைல மாலையிலிருந்து சில தருகிறோம்.*

*அருளே உருவாய் அமர்ந்த அண்ணாமலைப் பெருமான், காலம் தவறாது உரியநேரத்தில் கோயிலுட் சென்று தம்மைத் தரிசித்தல் அரிது என்று கொண்டு, அவரவர் இருந்த இடத்திலிருந்தே தரிசித்து உய்ந்திட மாமலையாய்த் திகழ்கிறார்.*

'காலம் நன்குணர்ந்து சினகரம் புகுந்து
காண்பரிது எனாது உலகனைத்தும்
சாலநின் றுழியே கண்டிடும் சோண
சயிலனே! கயிலை நாயகனே!'

*பிற மலைகள் யாவும் உடற்பிணி போக்கும் மூலிகைகளைத்தான் தரும். ஆனால் இத்திருவண்ணா மலையோ, நினைப்போர் தம் பிறவிப் பிணியையே*

*தீர்த்திடும் மாமருந்துமலை ஆகும்.*

'சினவும் நோய் மருந்து வேறுகொண்டிருக்கும்
சிலம்புகள் நாண, உட்கொள்வோர்
சனனநோய் மருந்தாய் எழுந்திடும் சோண
சயிலனே! கயிலை நாயகனே!'

*மற்ற மலைகள் வீடு கட்ட மரங்களைத்தான் தரும்; இத்திருவண்ணாமலையோ தன்னை நினைப்பவர்களுக்குப் பேரின்ப வீட்டையே நல்கும்.*

'ஓவுறும் மனைசெய் பவர்கொள மரம்தாங்கு
ஓங்கல்கள் நாண, உன்னினர்க்குத்
தாவுறும் உயர்வீடு அளித்தருள் சோண
சயிலனே! கயிலை நாயகனே!'

*அண்டமே ஊர்; அண்டத்தின் சுவர்களே கோயில் மதில்கள்; அண்டத்தின் வெளிப்பரப்பே கோயிற் பரப்பு; திருவண்ணாமலைத் தலமே கோயிற் கருவறை; மலையே கோயிற் கருவறையிலுள்ள சிவலிங்கம் ஆகும்.*

"ஏருலாம் அண்டச் சுவர்மதில் மிசைப்பால்
இலங்குறும் அண்ட கோளகையாச்
சாரும் ஆலயத்தில் இலிங்கமாம் சோண
சயிலனே! கயிலை நாயகனே!"

## 17. மலையில் மகோன்னத தீபம்

"புத்தி தரும் தீபம்; நல்ல புத்திர சம்பத்துமுதல்
சித்தி தரும் தீபம்; சிவதீபம்; - சத்திக்கு
உயிராகும் சோணமலை ஓங்கிவளர் ஞானப்
பயிராகும் கார்த்திகை தீபம்"

— *கார்த்திகை தீபவெண்பா.*

*ஸ்ரீ அருணகிரிப் பெருமான் உருவமாகவே விளங்கிக் கருணை பாலித்து வரும் இத் தெய்வத் திருமலையின் உச்சியில், கார்த்திகை மாதம் கார்த்திகை தினம் அருட்ஜோதி தரிசனம் காட்டப்பெறும். பெரிய செப்பு கொப்பரை ஒன்றில் நெய், துணி, கற்பூரம் ஆகியவற்றைக் கொண்டு மலை உச்சியில் தீபம் ஏற்றப் பெறும் சிறப்பு வாய்ந்த கார்த்திகை தீப உற்சவம் இந்தியாவில் நடைபெறும் முக்கியத்துவம் வாய்ந்த திருவிழாக்களில் ஒன்றாக கருதப்படுகிறது.*

*கார்த்திகை தீபத்திற்கு வேண்டிய நெய் முதலியவைகளைத் திருக்கோயில் கண்காணிப்பில் சுத்தமாகச் சேமித்து வைத்து இருப்பர். பிரார்த்தனை யாளர்களும், பக்த கோடிகளும் உரிய தொகை செலுத்தினால், அவர்கள் பங்கை சிப்பந்திகள் மூலம் பாதுகாப்போடு மலையில் சேர்க்க வகை செய்வர். நெய் துணி, கற்பூரம் ஆகியவைகளை மட்பாத்திரத்தில் கொண்டு சாரி சாரியாகச் செல்லும் ஊழியர்களும் தீபமேற்றிட 'துரு துரு' என்று நடக்கும் அவர்களின்*

விரைவு நடைகளும் பக்தர்களின் பேராவலை மேலும் மிகுவிக்கும் என்பதில் ஐயமில்லை.

கார்த்திகைத் தீபத் திருநாளன்று மாலை, அலைமோதும் பக்தர்கள் கூட்டம், 'அண்ணாமலைக்கு அரோகரா! அண்ணாமலைக்கு அரோகரா' என்று கோஷம் எழுப்பும். நாதஸ்வர இசையும், பஜனை கோஷ்டிகளின் பக்திப் பாடலும் நிறைந்து, எத்தகு கடின சித்தமுடையாரையும் மெய்சிலிர்க்கச் செய்து விடும்.

ஸ்ரீ அருணாசலேஸ்வரர் திருக்கோயிலின் எல்லா சந்நிதிகளும், கோபுர உச்சிகளும் ஒரே ஒளிமயம்தான்! பரணி தீபத்தின் ஒளி பகலவனையும் மிஞ்சி விடும். ஒளிமயமாய் ஒளிரும் இவ்வுன்னதமான வேளையிலே கிளிக் கோபுரத்தின் உட்புறமுள்ள பதினாறு கால் தீபதரிசன காட்சி மண்டபத்திலே, பஞ்சமூர்த்திகள் பெருமிதத்தோடு எழுந்தருளி மலையை நோக்கி நிற்க - அதே சமயம் ஏக காலத்தில் கோயிலிலும், மலைமீதும் நடைபெறும் தீப தரிசனக் காட்சி கண்டற்கரிய கண்கொள்ளாக் காட்சி ஆகும்.

## இலக்கியங்களில்...

கார்த்திகை மாதத்துக் கார்த்திகை நாளில் மலைமீது விளக்கேற்றி வழிபடும் இவ்வழக்கம், பன்னெடுங்காலமாக நம் நாட்டில் நடந்து வருவதை, 'குன்றத்து உச்சிச் சுடர்' என்று சீவகசிந்தாமணியும், 'நல மிகு கார்த்திகை நாட்டவரிட்ட தலை நாள் விளக்கு' என்று கார் நாற்பதும், 'மதி நிறைந்து அறுமீன் சேரும்

அகல் இருள் நடுநாள் மறுகு விளக்கு உறுத்து மாலை தூக்கிய, பழவிறல் மூதூர் பலருடன் துவன்றிய விழவு' என்று அக நானூறும் அழகு படக் கூறுகின்றன. மேலும் ஒல்காப் பெரும் புகழ் தொல்காப்பியனாரும், 'வேலி நோக்கிய விளக்கு நிலையும்' (தொல், பொருள் புறத்திணை இயல் 35) என்று குறிப்பிடுகிறார். அதற்கு மெச்சு புகழ் நச்சினார்க் கினியர், கார்த்திகைத் திங்கள் கார்த்திகை நாளில் ஏற்றிய விளக்கு என்று உரை வகுப்பதைக் காணலாம். கி.பி. ஏழாம் நூற்றாண்டில் வாழ்ந்த திருஞான சம்பந்தர், '... ... தொல் கார்த்திகை நாள் தளத்தேந்து இளமுலையார் தையலார் கொண்டாடும் விளக்கீடு'... ... ... என்றருளி கார்த்திகை விழாவின் மேன்மையோடு அது பெண்டிர்க்கே உரிய பெற்றிமைய்யையும் தொன்மையையும் எடுத்துக் காட்டுவதை உணரலாம்.

இத்தகு புராதனமும் புனிதமும் நிறைந்த திருவண்ணாமலைக் கார்த்திகைத் தீபத்தைக் கண்ணாரக் கண்டு களித்திடுவோம். ஒரு சமயம் திருக்கயிலாயத்தில் உமையாளொடு எம்பெருமான் எழுந்தருளிய ஞான்று, அங்குள்ள நெய்த்தீபங்களுள் ஒன்று அணையும் தறுவாயில் இருக்க, நெய்யை உண்ண வந்த ஓர் எலி எதிர்பாராத நிலையில் தீபத்தைத் தூண்டி பரமனின் பேரருளுக்கு ஆளாகி, மகாபலி சக்ர வர்த்தியாய் மண்ணகத்தே பிறக்கிறது. அம்மட்டோ! இந்நிலவுலகத்துச் சிவாலயங்களிலும் நெய்த் தீபமேற்றி கார்த்திகை மாதக் கார்த்திகை நட்சத்திரத்தில் பெரும் பேறு எய்திய அவர் வரலாறு நம் நினைவில் நிழலாடிட சிவகங்கைத் தீரத்தில் புற அழுக்குப் போக புனித

நீராடி, ஆத்மார்த்தமாக பிரம தீர்த்தத்தில் மூழ்கி அகத்தழுக் கொழிந்து பிரமஞானம் பெற்றிடுவோம். உடலே குன்று; உள்ளமே கொப்பரை; நேயமே வர்த்தி; இடையறா தியானமே நெய்; பிராணனே கற்பூரம்; ஞானமே அக்னி; அஞ்ஞான இருள் கெட இவைகளைப் பொருத்தி, மெய்ஞானச்சுடர் மேலோங்க தீபதரிசனம் கண்டு எல்லாப் பேறுகளும் பெற்றுய் வோமாக!

## சிவப்பிரகாசர் போற்றிய தீப விழா

'மனதிற்கும் எட்டாத நுண்ணியன்!' என்று வேத ஆகமங்கள் கூறிக்குறை இரக்கின்றன. இக்குறை நீங்க, உயிர்கள் கண்டு மகிழும் வண்ணம் பெரியமலை உருவில் - அதிஸ்தூல வடிவில் இறைவன் எழுந்தருளி இருப்பதை,

> 'கருத்தினும் கருத ரிய நுண்ணியன் எண்
> கடனற உலகெலாம் காண்பான்
> தரித்து அதிதூல வடிவும் சோண
> சயிலனே! கயிலை நாயகனே!'

— என்று துறை மங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் தாம் பாடியருளிய சோணசயில மாலையின்கண் தெரிவிக்கிறார். மேலும் அவர், பிறவிக் கடலைக் கடந்து முக்தியாகிய கரையில் சேர விரும்புவோர், வழி தெரியாமையால் ஏற்படும் திகைப்பு நீங்கித் தமது தவ ஒழுக்கமாகிய கப்பலை மேற்கொண்டு செலுத்தி உய்யும் பொருட்டு கலங்கரை விளக்கம் போன்று

உயர்ந்தெழுந்து ஒளி தந்து விளங்குவது, 'திரு வண்ணாமலை கார்த்திகை தீபம்' என்னும் கருத்து அமையப் பாடுகிறார். அது வருமாறு :

'பவக்கடல் கடந்து முத்தியங் கரையில்
படர்பவர் திகைப்பற நோக்கித்
தவக்கலம் நடத்த உயர்ந்தெழும் சோண
சயிலனே! கயிலை நாயகனே!'

திருவண்ணாமலை மீது கருமேகங்கள் தவழ்ந்து படர்வது புகை சூழ்ந்தது போன்று காணப்படுகிறது. புகை இருந்தால் நெருப்பு இருக்குமன்றோ! இதனால் இம்மலை அழலுருவாய் அமைந்ததை நினைவில் எடுத்துக் காட்டுகிறதன்றோ!

'மழைமுகில் வந்துதவழ்ந்து விண்படரும்
மலிதரு புகையென எழுந்து
தழலுரு உண்மை விளக்குறும் சோண
சயிலனே! கயிலை நாயகனே!

திருவண்ணாமலை உச்சியில் கார்த்திகை மாதத்தில் ஏற்றப்படும் விளக்கானது, புற இருளையும் அக இருளாம் அறியாமையையும் ஓட்டி மெய்ஞான ஒளியை ஏற்றி விளக்குகிறது.

'கார்த்திகை விளக்கு மணிமுடி சுமந்து
கண்டவர் அகத்திருள் அனைத்தும்
சாய்த்துநின் றெழுந்து விளங்குறும் சோண
சயிலனே! கயிலை நாயகனே!'

திருவண்ணாமலைக் குன்றின் மீது ஏற்றப்பெறும்

*விளக்கானது, அவரவர் இல்லங்களில் ஏற்றப்படும் சிறு சிறு விளக்கு அன்று, உலகுக்கே இடப் பெற்ற ஒளி விளக்கு ஆகும்.*

'சீர்தரும் மணியின் அணிந்தன எனகட்
செவியும், ஒண்கேழலின் மருப்பும்,
கார்தரும் உலகவிளக்கு எனும் சோண
சயிலனே! கயிலை நாயகனே!'

*திருவண்ணாமலை உச்சியில் கார்த்திகை தீபக் காட்சி எங்ஙனம் இருக்கிறது? மலைஉச்சியில் பனிமதி தோன்றித் திகழ, அருகே பேரொளிப் பிழம்பு சுடர் விட்டெரிய காணும் கவின் காட்சி, செந்தாமரை மலரை அணையும் வெள்ளை அன்னம் போல் அல்லவோ காட்சியளிக்கிறது.*

'மடலவிழ் மரைமாட் டெகின்என அருகு
மதியுறக் கார்த்திகை விளக்குத்
தடமுடி யிலங்க வளர்ந்தெழும் சோண
சயிலனே! கயிலை நாயகனே!'

## 18. ஆலய அமைப்பு

*இங்குள்ள திருக்கோயில் நமது நாட்டின் மிகப் பெரிய திருப்பணிகள் சிலவற்றுள் குறிப்பிடத் தக்க ஒன்றாகும். பழைமையின் அடிப்படையில் புதுமையின் ஒளி வீசுவதை இவ்வாலயத்தின் சிற்ப ஓவியங்கள் நன்கு புலப்படுத்தும். இக்கோயில் சுமார் 24 ஏக்கர் விஸ்தீரணமுள்ள நிலத்தில் அமைந்துள்ளது.*

ஆறாம் பிராகாரம் என்று கூறப்படும், வெளிப் பிராகாரத்தில் உள்ள திருமதில் மிக உயரமாகவும் கனமாகவும் உறுதியாகவும் கருங்கல்லினால் கட்டப் பெற்றுள்ளது. திருமதிலின் மத்தியில் நான்கு பக்கங் களிலும் நான்கு உயரமான கோபுரங்கள் வானோங்கி விளங்குகின்றன. கீழ்த் திசையிலுள்ள பெரிய கோபுரம் (ராஜகோபுரம்) 11 நிலைகளுடன் 217 அடி உயரம் உள்ளது. இஃது தென் இந்தியாவிலேயே இரண்டாவது உயரமான கோபுரமாக விளங்குகிறது. இதன் அடி நிலை 135 அடி நீளமும் 98 அடி அகலமும் கொண்டதாகும். தெற்குத் திசையிலுள்ள பெரிய கோபுரத்தைத் திருமஞ்சனக் கோபுரம் என்றும், மேற்குத் திசையிலுள்ள பெரிய கோபுரத்தைப் பேய்க் கோபுரம் என்றும், வடக்குத் திசையிலுள்ளதை அம்மணி அம்மாள் கோபுரம் என்றும் வழங்குவர்.

இராஜகோபுரத்தின் உள்பாகத்தில் வலப்புறமாக அமைந்திருப்பது ஆயிரங்கால் மண்டபம். இடதுபுறம் காணப்படுவது கம்பத்து இளையனார் திருச்சந்நிதி. இதன் மூலஸ்தானம் வளைகாப்பு மண்டபத்தின் வட கீழ்ப் பாரிசக் கம்பத்தில் அமைந்துள்ளது. இஃது ஸ்ரீ அருணகிரிநாதரின் பிரார்த்தனைக்கு இரங்கி பிரபுட தேவமாராயருக்குக் கருணைக்கடவுள் கந்தப் பெருமான் கம்பத்தில் காட்சியருளிய இடமாகும்.

இச் சந்நிதியின் தென்புறமாக நாற்புறமும் திருமாளப் பத்தி மண்டபத்துடன் அமைந்திருப்பது 'சிவகங்கை' என்னும் புண்ணிய தீர்த்தம். இதன் வட மேல் திசையில் காணப் பெறுவது 'சர்வ சித்தி விநாயகர்'

*சந்நிதி, சிவகங்கையின் கீழ்ப்புறமாகவும், தென்புறமாக வும் காணப் பெறுவது ஐந்தாம் பிராகாரம்.*

*சர்வ சித்திவிநாயகர் சந்நிதியின் வடபால் ஆயிரக்கால் மண்டபத்தின் தென்மேற்குத் திசையில் இருப்பது 'பாதாள லிங்கேஸ்வரர்' சந்நிதி. இங்கு ஸ்ரீரமண மஹரிஷிகள் பலகாலம் தங்கித் தவமியற்றி னார். இச்சந்நிதி திருவண்ணாமலை ஸ்ரீமதி பெரோசா தலையார்கான் அம்மையாராலும், சென்னை ஸ்ரீ ஜே. ஹெச். தாராபூர் அவர்களாலும் புனர் நிர்மாணம் செய்யப்பெற்று 14.5.1949இல் முன்னாள் இந்திய கவர்னர் ஜெனரல் ஸ்ரீ சக்ரவர்த்தி இராஜகோபாலாச் சாரியார் அவர்களால் திறந்து வைக்கப் பெற்றது.*

*பெரிய நந்தியின் எதிரில் காணப்பெறுவது 'வல்லாள மஹாராஜன்' கோபுரம். ஸ்ரீ அருணகிரி நாதர் இக் கோபுரத்தின் மீதேறித் தமது ஊனுடலை நீக்கிக் கொள்ள எத்தனித்த காலையில் ஸ்ரீ முருகப் பெருமான் அவர் முன் தோன்றிக் காப்பாற்றி யருளினர். இதன் வடபால் இருப்பது ஸ்ரீ கோபுரத்து இளையனார் சந்நிதி .*

"அடல் அருணைத் திருக்கோபுரத்தே
அந்த வாயிலுக்கு
வடஅருகிற் சென்று
கண்டு கொண்டேன்".

*என்று அருணகிரிநாதர் ஆனந்தக் களிப் பெய்தியது இவ்விடமே. இங்கு ஸ்ரீ அருணகிரி நாத ருடைய மூலவிக்கிரஹமும் உத்ஸவமூர்த்தியும் உள்ளன.*

கோபுரத்தின் தென்பாரிசத்தில் தோற்றுவது ஸ்ரீ கல்யாண சுந்தரேசுவரர் சந்நிதி.

வல்லாள மஹாராஜன் கோபுரத்தின் உள் பகுதியில் வலது புறமாக வனப்புடன் திகழ்வது "சத்தி விலாச சபாமண்டபம்". இங்கு திருவிழாக்காலங்களில் திருக்கோயில் சார்பில் சமய சம்பந்தமான சொற் பொழிவுகள் நடைபெறும். இம்மண்டபம், திருமணக் கூடமாகவும் உபயோகப்படுத்தப்படுகிறது. இதன்மேல் புறம் உள்ளது புரவிமண்டபம். கோபுரத்தின் தென்பால் உள் மதிலைச் சார்ந்திருப்பது காலபைரவர் சந்நிதி. இங்குள்ள மூர்த்தி இணையற்ற வீரா வேசத்துடன் ஜ்வலிப்பது காணத்தக்கதாகும். அருகில் அமைந் திருப்பதுவே "பிரம தீர்த்தம்" என்னும் புண்ணியத் தடாகம். இதன் மேல்பாரிசத்தில் தொடங்குவது நான்காம் பிராகாரமாகும். இப்பிராகாரத்தின் கீழ்த் திசையில் காணப்படும் பிரதான கோபுரம் "கிளிக்கோபுரம்" என்று வழங்கப்பெறும். இக் கோபுரத்தின் மீதும் கோபுரத்தின் முதல் நிலையிலும் கிளியின் உருவம் அமைந்துள்ளது. இஃது ஸ்ரீ அருண கிரிநாதர் கிளிவடி வந்தாங்கிப் பாரிஜாத மலர் கொண்டுவந்த காலத்துத் தாம் விட்டுச் சென்ற தமது திருமேனியைக் காணாது கிளி உருவாகவேயிருந்து "அநுபூதி" பாடியருளிய வரலாற்றை நினைவுறுத்துவ தாகும்.

கிளிக் கோபுரத்தின் உட்புறம் எதிரில் தோற்றும் 16 கால் மண்டபம் என்படும் காட்சி மண்டபத்தில், கார்த்திகை தீபத்திருநாள் மாலையில் பஞ்சமூர்த்திகள்

எழுந்தருளி மலையை நோக்கி நிற்க, ஏககாலத்தில் தீப தரிசனக் காட்சி நடைபெறும். இம் மண்டபத்தின் எதிரில் மேல் புறமாக துவஜஸ்தம்பமும் பரணிதீபம் வைக்கும் அகண்ட தீபஸ்தம்பமும் காணலாம்.

இது மூன்றாம் பிராகாரமாகும். இப்பிராகாரத்தில் ஸ்ரீ சம்பந்த விநாயகர் சந்நிதி ஸ்தலவிருட்சமாகிய மகிழ மரம், திருக்கல்யாண மண்டபம், ஸ்ரீ அருணகிரி யோகீசுவரர் சந்நிதி, தேவி உண்ணாமுலையின் திருச் சந்நிதி, யாகசாலை, காளத்தி லிங்கேசுவரர் சந்நிதி, திருக்கோயில் நிர்வாக அலுவலகம், பழநியாண்டவர் சந்நிதி, ஏகாம்பரேசுவரர் சந்நிதி, ஜம்புலிங்கேசுவரர் சந்நிதி, பிடாரி-சப்த கன்னிமார் சந்நிதி, சிதம்பர லிங்கேசுவரர் சந்நிதி ஆகியவற்றைக் காணலாம்.

இப்பிராகாரத்தின் உள் மதிற் சுவர்களில் ஏராளமான பழைமையான கல்வெட்டுகள் காணப் பெறும்.

ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான் திருச் சந்நிதியின் பிரதான வாயிலில் உள்ள ஸ்ரீ அதிகாரநந்தீஸ்வரரைத் தரிசித்து உள்ளே சென்றால், ஆங்கு இரண்டாம் பிராகாரத்தில் சிவக்ஷேத்திரத்துக்குரிய சகல மூலவர்களும், உத்ஸவ மூர்த்திகளும், சமயாசாரியர்களும், நாயன்மார்களும், ஸ்ரீ ருக்மிணி சத்யபாமா சமேத ஸ்ரீ வேணுகோபால சுவாமியும் காட்சியளிப்பர்.

இதன் மேல்பத்தியான முதற் பிராகாரத்தில் ஸ்ரீ தட்சணாமூர்த்தியும், சண்டிகேசுவரரும் விளங்குவர்.

இருதய ஸ்தானமாக விளங்கும் கர்ப்பக்கிருஹத்தில் ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான் லிங்காதார வடிவத்தில் அருட்காட்சியளிக்கின்றார்.

இரண்டாம் பிராகாரத்தில் வடதிசையில் உள்ள வைகுண்ட வாயில் வழியாகத் தேவியின் திருச்சந்நிதி சேரலாம். சந்நிதி முன்னுள்ள துவஜஸ்தம்ப மண்டபத்தில் நவக்கிரக மூர்த்திகள் விளங்குவர்.

தேவி சந்நிதியில் உள்ள மஹா மண்டபத் தூண்களில் அஷ்டலட்சுமிகள், ருத்ர துர்க்கை, மஹாசக்தி, மஹா சரஸ்வதி, சித்தி விநாயகர், கார்த்திகேயர், காலாந்தகர், வீணாதரர், வீரபத்திரர் ஆகியோர் கண்கொள்ளாக் கலைத் திறனுடன் காணப் பெறுவர்.

கர்ப்பக் கிரஹத்தைச் சுற்றிய பிராகாரத்தில், ஸ்ரீ பராசக்தியம்மன், பரிவார மூர்த்திகள், சண்ட சத்தி ஆகியோர் காட்சியளிப்பர்.

ஸ்ரீபராசக்தியம்மன் சந்நிதியின் வடபுறத்தில் திருப்பனந்தாள் ஸ்ரீ காசி மடத்தாரால், ஸ்ரீமாணிக்க வாசக சுவாமிகள் அருளிய "திருவெம்பாவை"ப் பாடல்கள் சலவைக் கல்லில் பொறிக்கப் பெற்றுப் பதிக்கப் பெற்றுள்ளன.

கர்ப்பக்கிருஹத்தில் திரிபுவனேச்வரியான தேவி உண்ணாமுலை, திவ்யமங்கள ஸ்வரூபியாகப் பேரெழிலுடன் பிரகாசிக்கின்றாள்.

## 19. தனவணிகர் தருமங்கள்

*இக்கோயில் மிகவும் கீலமாகி இருந்ததை சுமார், 90 வருடங்கட்கு முன் நாட்டுக்கோட்டை நகரத்தார் களாகிய தனவணிகப் பிரமுகர்கள் முன்வந்து, சுமார் முப்பத்தைந்து லட்சம் ரூபாய் செலவு செய்து ஆலயத்தைப் புதுப்பித்தும், திருவாபரணங்கள் வாகனங்கள் முதலியன செய்து வைத்தும், 12-6-1903இல் மஹாகும்பாபிஷேகம் நடாத்தினர்.*

*மீண்டும் நகரத்தார்களின் பேருதவி கொண்டு சுமார் ரூபாய் நாற்பது ஆயிரம் செலவில், தாரண ஆண்டு வைகாசித் திங்கள் 22ஆம் நாள் (4-6-1944) பானுவாரம், திரயோதசி திதி, சுவாதி நட்சத்திரம், சித்தயோகம் கூடிய சுபதினத்தில் உதயாதி நாழிகை 12-30க்கு மேல் 16-15 நாழிகை அளவில் சிம்ம லக்கினத்தில் அஷ்ட பந்தன மஹா கும்பாபிஷேகம் செய்விக்கப் பெற்றது.*

*அதன் பிறகு 31 ஆண்டுகளுக்குப்பிறகு பக்தர் களின் பொருளுதவியினாலும், நகரத்தார்களின் பேருதவியினாலும் அரசு மான்யத்தினாலும், தமிழ கத்தின் இதர கோயில்களிலிருந்து பொருளுதவிப் பெற்றும், எண்ணில் பெரும் சிறப்புடைய இத்தலத்தில் திருக்கோயில் கொண்டருளும் அன்னை உண்ணா முலைக்கும் அருள்மிகு அண்ணாமலைப் பெருமா னுக்கும், பரிவார மூர்த்திகளுக்கும் ஸ்வர்ணபந்தனம், அஷ்டபந்தனம் சாத்தியும் எங்கும் காணா ஏற்றமுடைய இராஜகோபுரங்கள், விமானங்கள் ஆகியவற்றினைப் புதுப்பித்தும் இராட்சச ஆண்டு பங்குனித் திங்கள்*

22ஆம் நாள் (4-4-1976) ஞாயிற்றுக்கிழமை பூர்வபட்சம், பஞ்சமி திதி, ரோஹிணி நட்சத்திரம் அமிர்தயோகம் கூடிய நன்னாளில் உதயாதி நாழிகை 5-30க்குமேல் 7-30 மணிக்குள் (காலை 8-15 முதல் 9 மணி அளவில்) விருஷப லக்கினத்தில் மகா கும்பாபிஷேகம் செய்விக்கப்பட்டது.

காரைக்குடி, சா.நா.சா. குடும்பத்தினரால் 'சாதுக்கள் சத்திரம்" ஒன்றும் கோட்டையூர், மெ.க. குடும்பத்தினரால் "அன்ன சத்திரம்" ஒன்றும், காரைக்குடி, முத்து, அரு குடும்பத்தினரால் "வேத பாடசாலை" ஒன்றும், அவரவர் சொந்தப் பொருள் கொண்டு சொந்த நிர்வாகத்தில் நடைபெற்று வருகின்றன.

நகரத்தார்கள் பொதுவில் அமைத்துள்ள "ஓயாமடம்" என்ற மடம் ஒன்றும் நகரை அணி செய்கின்றது.

ஸ்ரீ அம்பிகையின் திருத்தேர் பழுது பட்டிருந்ததை, தர்மகர்த்தாக்களின் பிரயத்தனத்தின் பேரில் நாட்டுக் கோட்டை நகரத்தார்களால் இருபத்தையாயிரரூபாய் செலவில் புதிய முறையில் புதுப்பிக்கப் பெற்று, 29-6-1956இல் மிக விமரிசையாக வெள்ளோட்டம் செய்விக்கப்பெற்றது.

காரைக்குடி, சா.நா.சா. குடும்பத்தினரால் கலையழகுடன் காட்சி தரும் ஸ்ரீ பிக்ஷாண்டவருக்கு தங்கக் கவசம் செய்து வைக்கப் பெற்றுள்ளது.

## 20. திருப்பனந்தாள் ஸ்ரீகாசி மடம் தருமங்கள்

*1. ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான் திருச்சந்நிதி முன்பாக 'சிவ சிவ' ஒளி விளக்கு (Neon Sign) பொருத்தப் பெற்றுக் காண்போர் கண்ணுக்கும் கருத்துக்கும் 'சிவ சிவ' ஒளி பரப்பி விளங்குகின்றது.*

*2. ஸ்ரீமாணிக்கவாசகப் பெருமான் இத்தலத்தில் சிறப்பித்து அருளிச் செய்த திருவெம்பாவைப் பாசுரங்கள் இருபதும் வெண்ணிறச் சலவைக் கற்களில் உலோக எழுத்துகளில் உறுதியான முறையில் பொறிக்கப் பெற்று ஸ்ரீ உண்ணாமுலையம்மன் ஆலயத்தில் ஸ்ரீபராசக்தி அம்பிகை சந்நிதியின் வடபால் பதிக்கப் பெற்றுள்ளது.*

*3. தேவி உண்ணாமுலையின் திருச்சந்நிதியில் மின்சார விளக்குகள் பழுதடைந்திருந்ததை முற்றிலும் புதுப்பிக்கும் பொருட்டாக ரூ. 5,000 நன்கொடை வழங்கியுள்ளார்கள்.*

*4. ஸ்ரீ அண்ணாமலையண்ணலுக்கு நாள்தோறும் பால் அபிஷேகம் செய்து அதனைப் பள்ளிக் குழந்தைகளுக்கு விநியோகம் செய்யும்படியாகத் திட்டம் செய்து அதற்கென ரூ 30,000 மூலதனம் ஏற்படுத்தியுள்ளார்கள்.*

*5. ஸ்ரீ அண்ணாமலையார் சந்நிதி முன்பாக நாள் தோறும் காலை, மாலை இரு காலங்களிலும் இதற்கென நியமிக்கப்பெற்ற ஓதுவார் ஒருவரால் திருமுறை ஓதப்பெற்று, அதனை ஒலிபரப்பி மூலம்*

நகர் எங்கனும் ஒலிக்கும்படி செய்துள்ளார்கள். இதற்கென ரூ. 24,000 சேமநிதியும் அமைத்துள் ளார்கள்.

6. ஸ்ரீ குமர குருபர மூர்த்திகளின் நினைவு நாளான திருக் கார்த்திகை தீப தினத்தன்று, அந்தணர், அருந்தவர், ஆதரவற்றோருக்கு அன்னம் பாலித்தல் நடாத்தி வருகிறார்கள். இக்கைங்கர்யத் திற்கென அமைத்துள்ள சேமநிதி ரூ. 12,000.

7. திருவண்ணாமலையில் படிக்காசு நிதி. - ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான், ஸ்ரீ உண்ணாமுலை யம்மை திருச் சந்நிதிகளில் முப்போதும் திருமேனி தீண்டிப் பூசனை புரியும் ஆதி சைவ அந்தணர்களுக்குப் பிரதி தினமும் படிக்காசு அளித்தற்பொருட்டாக ரூ. 13,000 சேமநிதி ஏற்படுத்தியுள்ளார்கள்.

## 21. சீரமைப்பு

இவ் வாலயத்தின் முன்னாள் தர்மகர்த்தர்களான ஆற்காடு, ராவ்பஹதூர் தனகோட்டி முதலியார் அவர் களும், இராமச்சந்திரபுரம், தீ. சொ. முருகப்ப செட்டியார் அவர்களும், கோட்டையூர் பெ.க.அ.சித. வீரப்ப செட்டியார் அவர்களும், ஸ்ரீ அண்ணாமலை யார் திருப்பணியில் பேரார்வங்கொண்டு சிறிதும் சலிப்பின்றித் திறம்படச் செயலாற்றியதன் காரணமாக, ஆலயத்தின் புனரமைப்பும், பெருவிழாக்களும், காட்சிக்கும் கருத்துக்கும் பெரு விருந்தாக விளங்கு கின்றன. அவர்களுடைய அரும் பெரும் கைங்கர் யங்கள் என்றும் மறக்க இயலாதவையாகும்.

பெரிய (ராஜ) கோபுரத்தின் வடபால் இருக்கும் திட்டுவாசல் முன்புள்ள "சித்திர மண்டபம்" திருவண்ணாமலை ஸ்ரீமான் ராமு முதலியார் வகையினரால் நிர்மாணிக்கப் பெற்றது.

சில ஆண்டுகட்கு முன்பாக, திருப்பத்தூர் ஸ்ரீமான் சூரிய நாராயண செட்டியார் அவர்களால், திருமஞ்சனக் கோபுரம் பழுதுபார்த்துச் சீரமைக்கப் பெற்றது.

அன்னவரால் ஸ்ரீ அண்ணாமலையார் ஆலயத்தில் தினந்தோறும் திருமுறை ஓதும் பொருட்டாக தேவார பாடசாலை அமைக்கப் பெற்று நடந்து வருகின்றது.

ஸ்ரீ அருணாசலேசுவரர் திருக்கோயிலின் தர்மகர்த்தர்களில் ஒருவரும், 'மாடர்ன் கபே' உரிமையாளருமான ஸ்ரீமான் R. நாராயணசாமிரெட்டியார் அவர்கள், ஸ்ரீ கம்பத்திளையனார் சந்நிதியில் கருங்கல் தளவரிசை முதலான பணிகள் செய்து புதுப்பித்தும் மேற்படி சந்நிதி முன் மண்டபத்தில், கந்தப்பெருமான் காட்சி தரும் விசேடத் தலங்களான திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், திருத்தணி (குன்று தோறாடல்), பழமுதிர்ச் சோலை ஆகிய தலங்களின் காட்சிகளையும், ஸ்ரீ கோபுரத்திளையனார், ஸ்ரீ கம்பத்திளையனார் ஆகிய மூர்த்திகளின் வரலாற்றுக் காட்சிகளையும், கந்தர் அனுபூதிப் பாடல்களையும் பெரிய உருவில் காண்போர் உள்ளம் கவரும் வண்ணம் தீட்டச் செய்து அமைத்துள்ளார்கள்.

சமயப் பேரவை நடைபெறுதற் பொருட்டு அமைந்துள்ள சத்தி விலாச சபாமண்டபம் சீர்திருத்தப் பணிக்கென சென்னை, மணலி லெட்சுமணசாமி முதலியார் தர்ம ஸ்தாபனத்திலிருந்து ரூ. 5,000 நன்கொடை வழங்கியுள்ளார்கள்.

## 22. திருமஞ்சனம்

சுமார் 75 ஆண்டுகளாக நடைபெறாமல் நின்று போயிருந்த "திருமஞ்சனம்" கொண்டு வந்து ஆலயத்தின் கதவுகள் திறக்கும் பணி இத் திருக்கோயில் அறங்காவலர்களின் பெருமுயற்சியால் 16.2.81 முதல் ஆரம்பிக்கப்பட்டுச் சிறப்புற நடைபெற்று வருகிறது. இதற்கென தனித் திட்டம் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

## 23. திருவிளக்குப் பணி

கோட்டையூர், அ.க.அ.மெ. குடும்பத்தினர் சுமார் 35 ஆண்டுகட்கு முன்பாக ஆலயத்தில் மின்சார விளக்குகள் அமைத்து அதற்கெனத் தனியாக எலக்ட்ரிக் எஞ்சின் வாங்கி வைத்துள்ளனர்.

மின்சார விளக்குகள் அமைத்து நீண்ட காலம் ஆனமையால், அவைகள் ஆங்காங்கு துண்டிக்கப் பெற்றுப் பழுதடைந்துள்ளன. மீண்டும் புதிதாக (Re-wiring) நிர்மாணிக்க வேண்டிய நிலையில் இருக்கின்றது. இக் கைங்கர்யத்திற்குச் சுமார் 200,000 ரூபாய் வரையில் செலவாகலாம் என்று மதிப்பிடப் பெறுகிறது. ஆதியும் அந்தமும் இல்லா அரும் பெரும் சோதியாக விளங்கும் ஸ்ரீ அண்ணாமலையார்

*ஆலயத்தில் திருவிளக்குப்பணி சிறப்புறச் செய்விப்ப வர், அவர் அருட்கடாட்சத்தால் அக இருள் அகலப் பெற்று ஆன்மிக ஒளி பெறுவது உறுதியாகும். புண்ணியவான்களான தனவந்தர்கள் மனங்கொள்ள வேணுமாய் ஸ்ரீ அண்ணாமலை யண்ணலின் திருவரு ளைப் பிரார்த்திக்கின்றோம்.*

*தேவி உண்ணாமுலையின் திருச்சந்நிதி மின் விளக்குகள் திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடம் அதிபர் அவர்கள் அளித்த நன்கொடை ரூ. 5,000-த்தில் முற்றும் புதுப்பிக்கப் பெற்று நிலவொளி வீசி நிலவுகின்றது.*

*ஸ்ரீ அண்ணாமலைப் பெருமான் திருச்சந்நிதி மின் விளக்குகள் புதுப்பிக்கும் கைங்கர்யத்திற்காக திருப்புகலூர் ஸ்ரீஅக்னீஸ்வர சுவாமி தேவஸ்தானத்தி லிருந்து ரூ. 10,000 நன்கொடையளித்துள்ளார்கள்.*

## 24. நித்திய பூஜா காலங்கள்

| | | | |
|---|---|---|---|
| 1. உஷத் காலம் | காலை | மணி | 5-30 |
| 2. கால சந்தி | காலை | மணி | 8-00 |
| 3. உச்சிக் காலம் | பகல் | மணி | 11-30 |
| 4. சாயரக்ஷை | மாலை | மணி | 6-00 |
| 5. இரண்டாம் காலம் | இரவு | மணி | 7-30 |
| 6. அர்த்த ஜாமம் | இரவு | மணி | 9-00 |

## 25. பஞ்சப் பருவ விசேடங்கள்

| | |
|---|---|
| பிரதி மாதப் பிறப்பு | பிரதி சோமவாரம் |
| பிரதி சுக்கிர வாரம் | பிரதி சனிக்கிழமை |
| பிரதி அமாவாசை | பிரதி கிருத்திகை |
| பிரதி பௌர்ணமி | பிரதி பிரதோஷம் |
| பிரதி சுக்ல சதுர்த்தி | பிரதி சுக்ல சஷ்டி |

## 26. உத்ஸவங்கள்

| | |
|---|---|
| சித்திரை - மாதம் | வசந்த உத்ஸவம் (மிருகசீர்ஷ நட்சத்திரம் தொடங்கி 10 நாட்கள் நடைபெறும்). |
| ஆனி - மாதம் | தெட்சிணாயன பிரம்மோத்ஸவம் (10 நாட்கள் நடைபெறும்). |
| ஆடி - மாதம் | ஆடிப்பூர உத்ஸவம், கடைசி நாள் தீமிதி விழா (10 நாட்கள் நடைபெறும்). |
| புரட்டாசி மாதம் | நவராத்திரி உத்ஸவம் (10 நாட்கள் நடைபெறும்). |
| ஐப்பசி மாதம் | ஸ்கந்த சஷ்டி உத்ஸவம் (6 நாட்கள் நடைபெறும்). |
| கார்த்திகை மாதம் | பிரமோத்ஸவம் - தீபத் திருவிழா (10 நாட்கள் நடைபெறும்). 10ஆம் நாள் மலையில் தீபதரிசன காட்சி. |

| | |
|---|---|
| மார்கழி மாதம் | மாணிக்க வாசகர் உத்ஸவம் (10 நாட்கள் நடைபெறும்). |
| தை மாதம் | சங்கராந்தி உத்ஸவம் (10 நாட்கள் நடைபெறும்). 10ஆம் நாள் திருவூடல் உற்சவம். |
| பங்குனி மாதம் | உத்திரத் திருவிழா (ஆறு நாட்கள் நடைபெறும்). |

## 27. விசேட உத்ஸவங்கள்

| | |
|---|---|
| சித்திரை மாதம் | ஸ்ரீ நடராஜர் அபிஷேகம் (திருவோண நட்சத்திரம்). |
| சித்திரை மாதம் | ஸ்ரீ திருநாவுக்கரசர் உத்ஸவம் (சதய நட்சத்திரம்). |
| வைகாசி மாதம் | அபிஷேகம் (விசாக நட்சத்திரம்). |
| வைகாசி மாதம் | ஸ்ரீ திருஞானசம்பந்தர் உத்ஸவம் (மூல நட்சத்திரம்) |
| ஆனி மாதம் | ஸ்ரீ மாணிக்கவாசகர் உத்ஸவம் (மக நட்சத்திரம்). |
| ஆனி மாதம் | ஸ்ரீ நடராஜர் திருமஞ்சனம் (உத்திர நட்சத்திரம்). |
| ஆடி மாதம் | அம்பாள் நிறையணி (வரலட்சுமி நோன்பு) |

| | |
|---|---|
| ஆடி மாதம் | ஸ்ரீ சுந்தரமூர்த்தி சுவாமிகள் உத்ஸவம் (சுவாதி நட்சத்திரம்). |
| ஆவணி மாதம் | ஆகஸ்ட் மாதம் 15ஆம் தேதி ஸ்ரீ அருணகிரி நாதர் விழா (சுதந்தர தினம்). |
| ஆவணி மாதம் | விநாயக சதுர்த்தி. |
| ஆவணி மாதம் | ஸ்ரீ கிருஷ்ண ஜயந்தி. |
| ஆவணி மாதம் | பிட்டுத் திருவிழா (மூல நட்சத்திரம்) |
| ஆவணி மாதம் | ஸ்ரீ நடராஜர் அபிஷேகம் (சுக்ல-சதுர்த்தசி) |
| புரட்டாசி மாதம் | சரஸ்வதி பூஜை, அம்பாள் நிறையணி (சுக்ல-நவமி). |
| புரட்டாசி மாதம் | ஸ்ரீ நடராஜர் அபிஷேகம் (சுக்ல சதுர்த்தசி). |
| புரட்டாசி மாதம் | ஸ்ரீ அருணகிரிநாதர் (மூலம்) திரு நட்சத்திரம். |
| ஐப்பசி மாதம் | அன்னாபிஷேகம் (அசுவினி நட்சத்திரம்). |
| கார்த்திகை மாதம் | 1,008 சங்காபிஷேகம் (சோமவாரம்). |
| மார்கழி மாதம் | வைகுண்ட ஏகாதசி. |
| மார்கழி மாதம் | திருவாதிரை விழா (ஆருத்ரா தரிசனம்). |

| | |
|---|---|
| *தை மாதம்* | *திருவூடல் உற்சவம் (2ஆம் தே).* |
| *தை மாதம்* | *மணலூர்ப்பேட்டை தீர்த்தவாரி (5ஆம் தேதி).* |
| *தை மாதம்* | *கலசபாக்கம் தீர்த்தவாரி (ரதஸப்தமி).* |
| *தை மாதம்* | *தைப்பூசம் (ஈசான்ய தீர்த்தவாரி).* |
| *மாசி மாதம்* | *பள்ளிக்கொண்டா பட்டு தீர்த்தவாரி வல்லாள மஹாராஜன் உத்தரகிரியை (மக நட்சத்திரம்).* |
| *மாசி மாதம்* | *மஹாசிவராத்திரி (அமர–சதுர்த்தசி).* |
| *மாசி மாதம்* | *ஸ்ரீநடராஜர் அபிஷேகம் (சுக்ல சதுர்த்தசி).* |

## 28. கார்த்திகை தீப தரிசன பிரம்மோத்ஸவம்

*இவ்விழா கார்த்திகை மாதம் உத்ராட நட்சத்திரத்தில் துவங்கப் பெற்றுப் பத்தாவது நாளாகிய திருக்கார்த்திகை தினத்தன்று மஹாதீப தரிசனமும் பின்னர், தெப்பத் திருவிழாவும் கிரிப் பிரதட்சிணமும் நடைபெறும்.*

........................................................................................

## திருநாள் முக்கிய வாகனங்கள், விபரங்கள்

........................................................................................

| | |
|---|---|
| *முதல் நாள்* | *மூஷிகம், மயில், அதிகாரநந்தி, அன்னம், சின்ன ரிஷபம்.* |

| | |
|---|---|
| 2ஆவது நாள் | வெள்ளி இந்திர விமானங்கள் முதலியன. |
| 3ஆவது நாள் | சிம்மம், வெள்ளி அன்னம் முதலியன. |
| 4ஆவது நாள் | வெள்ளிக் கற்பக விருக்ஷம், வெள்ளிக் காமதேனு, இதர வெள்ளி வாகனங்கள். |
| 5ஆவது நாள் | வெள்ளி மூஷிகம், வெள்ளி மயில் வெள்ளிப் பெரிய ரிஷபம் ஆகியன. |
| 6ஆவது நாள் | காலை அறுபத்து மூவர் திருவீதி எழுந்தருளல். இரவு வெள்ளி ரதம், வெள்ளி இந்திரவிமானம் ஆகியன. |
| 7ஆவது நாள் | பஞ்சமூர்த்திகள், திருத்தேர். |
| 8ஆவது நாள் | மாலை, தங்கவண்ண மேரு, பிக்ஷாண்டவர் உத்ஸவம். இரவு பஞ்சமூர்த்திகள், குதிரை வாகனம் ஆகியன. |
| 9ஆவது நாள் | கைலாச வாகனம், காமதேனு வாகனம் ஆகியன. |
| 10ஆவது நாள் | உதயாத் பூர்வம், 4 மணிக்குப் பரணி தீபம். பகல், பிரமதீர்த்தம்... தீர்த்த வாரி. மாலை 6 மணிக்கு பஞ்ச மூர்த்திகள் தங்கவண்ண விமானங் |

களில் எழுந்தருளி, ஜ்யோதிஸ்வரூப மஹா தீபதரிசனம். இரவு தங்க வண்ண ரிஷபம் முதலியன.

11ஆவது நாள் அய்யன்குளம் என்னும் இந்திர தீர்த்தத்தில் தெப்பத் திருவிழா.

12ஆவது நாள் ஸ்ரீ அபீதகுசாம்பாள் சமேத ஸ்ரீ அருணாசலேசுவரர் கிரிப் பிரதட்சணம்.

13ஆவது நாள் சண்டிகேசுவரர் உத்ஸவம்.

### கல்வெட்டுகள்

இங்கு நூற்றுக்கணக்கான கல்வெட்டுகள் உள்ளன. இவற்றுள் பலவற்றை அரசாங்கத்துத் தென்னிந்திய கல்வெட்டுப் பதிவு நிலையத்தினர் பதிவு செய்துள்ளனர். இவற்றை A R Nos. 419 to 428 of 1929, 469 to 574 of 1952 என்று எண்ணிட்டுள்ளனர். இவற்றுள் 469 to 574 of 1952 எண்ணுள்ள கல்வெட்டுகள், தென்னிந்தியக் கல்வெட்டுகளின் எட்டாவது தொகுதியில 57 முதல 165 வரையுள்ள எண்ணுடன் (South Indian Inscription Vol viii, Nos. 57 to 165) வெளியாகியுள்ளன. தற்போது பாண்டிச்சேரி மாநிலத்திலிருந்து மத்திய அரசின் தொல்பொருள் இலாகாவினர் கல்வெட்டு குறிப்புகளை ஆராய்ச்சி செய்து வருகின்றனர்.

## 29. கல்வெட்டுச் செய்திகள்

இக்கோயிலில் முதற் பராந்தகன் காலம் (கி.பி.

907-953) முதல் சதாசிவராயர் காலம் (கி.பி. 1543 - 1565) வரையில் பொறிக்கப் பெற்ற கல்வெட்டுகள் 125 உள்ளன. அக் கல்வெட்டுகளில் காணப்பெறும் அரசர்கள் பெயர் வருமாறு :

| | |
|---|---|
| கோப்பரகேசரி வர்மன் (பராந்தகன் I) | கி.பி. 907-953 |
| கன்னர தேவர் | கி.பி. 949-967 |
| இராசகேசரி பன்மர் (பராந்தகன் II) | கி.பி. 956-973 |
| வீரபாண்டியன் தலைகொண்ட கரிகாலன் | கி.பி. 956-969 |
| இராசேந்திரன் I ........................................ | கி.பி. 1012-1044 |
| இராசாதிராசன் I ........................................ | கி.பி. 1018-1054 |
| இராசேந்திரன் II ........................................ | கி.பி. 1052-1064 |
| குலோத்துங்கன் I ........................................ | கி.பி. 1070-1120 |
| இராஜராஜன் II ........................................ | கி.பி. 1146-1173 |
| இராஜராஜன் III ........................................ | கி.பி.1216-1241 |
| கோப்பெருஞ்சிங்கன் ........................................ | கி.பி. 1216-1246 |
| இராஜேந்திரன் III ........................................ | கி.பி. 1246-1279 |
| விக்கிரம பாண்டியன் I ........................................ | கி.பி. 1268-1281 |
| குலசேர பாண்டியன் I ........................................ | கி.பி. 1268-1311 |
| வீரவல்லாள தேவர் III ........................................ | கி.பி. 1291-1342 |
| அரியண்ண உடையார் (ராசப்பிரதிநிதி) | கி.பி. .....1377) |

வீர விருப்பண்ண உடையார்

(அரியண்ண உடையார் மகன்) ...................... கி.பி. 1379

தேவராயர்II ........................................ கி.பி. 1423-1446

வீரவிஜயராயர் (தேவராயா குமாரர்) கி.பி. 1422-1424

மல்லிகார்ச்சுன ராயர் ................................ கி.பி. 1447-1465

கிருஷ்ண தேவராயர் ................................... கி.பி. 1509-1529

சதாசிவ ராயர் ......................................... கி.பி. 1543-1565

மேற்கண்ட அரசர்கள் காலத்தில் ஏற்பட்ட மெய்க் கீர்த்திகளும், அக்கால ஆட்சியின் அமைப்பு முறைகளும், கோயிலுக்கு மனமுவந்து செய்த சாதாரண விளக்கு, சந்தி விளக்கு, நந்தா விளக்கு, அரை விளக்கு, கால் விளக்கு என்று சொல்லப் பெறும் பல்வேறு வகைப்பட்ட விளக்கு தானங்களும் ஆடு, மாடு, நிலம், அணிகலன் முதலிய தானங்களும், பேசப்பெறுகின்றன.

## மாணிக்கவாசகர் கோயில்

திருவண்ணாமலையை வலம்வரும் வழியில் தேவாரம் போற்றும் அணி அண்ணாமலைத் தலம் உள்ளது. அதற்கு அருகில் மாணிக்கவாசகருக்கு தனிச் சிறுகோயில் அமைந்து விளங்குகிறது. இங் கிருந்துதான் மாணிக்கவாசக சுவாமிகள் இயற்கையின் இனிய அழகில் தோய்ந்த நிலையில், 'திருவெம்பாவை' (அருளியதாகக் கருதுகிறார்கள்) அருளியுள்ளார்.

# சில முக்கிய திருப்பணிகள்

| திருப்பணியாளர்கள் | திருப்பணிகள் | செலவு மதிப்பு |
|---|---|---|
| கோட்டையூர், அ.க. வகை | சுவாமி கோயில், | |
| யறா குடும்பத்தினர் | அம்மன் கோயில், | ரூ. |
| சொந்தமாகவும், பிற | அணியொட்டிக் கால் | 12,00,000 |
| நகரத்தார்களின் உதவி | மண்டபம் முதலான | |
| பெற்றும், | திருப்பணிகள். | |
| கோட்டையூர், அ.க.அ.மெ. | அணி அண்ணாமலைக் | |
| குடும்பத்தினரும், ராம. | கோயில் திருப்பணி, | 3,50,000 |
| பெ. குடும்பத்தினரும், | அக்ரஹார விடுதி, | 50,000 |
| கோட்டையூர், க.வீ. அள. | கும்பாபிஷேகம் | |
| குடும்பத்தினர். | (27.1.1918) நிலம். | |
| | சிவகெங்கைத் தீர்த்தம் | |
| | திருமாளப்பத்தி | |
| | மண்டபம், படி, சர்வ | 1,75,000 |
| | சித்தி விநாயகர் | |
| | ஆலயம், வளைகாப்பு | |
| | மண்டபம், | |
| செட்டிநாடு, ராஜா ஸர். | பிரமதீர்த்தம் கருங்கல் | 75,000 |

| | | |
|---|---|---|
| அண்ணாமலை செட்டியார் | திருப்பணி. | |
| அவர்கள். இராமச் | திருக்கல்யாண | |
| சந்திரபுரம், தீ.சொ-தீ. | மண்டபம். | 50,000 |
| நா-தீ.அ. குடும்பத்தினர் | துர்க்காம்பாள் ஆலயத் | |
| கோட்டையூர், அ.க. | திருப்பணி. 16 கால் | 35,000 |
| குடும்பத்தினர், கோட்டை | மண்டபத்தைச் சேர்ந்த | |
| யூர் ராம.பெ. குடும் | கச்சு சாத்து மண்டபம் | 35,000 |
| பத்தினர். கோட்டையூர் | திருப்பணி. பெரிய | |
| அ.க.அ.மெ. குடும்பத் | ராஜகோபுரம் | |
| தினரும், அ.க.அ.சித. | தொடங்கிய பிரம்ம | 25,000 |
| வெ.ந. அவர்களும். | தீர்த்தம் வரை கருங்கல் | |
| | தளவரிசை. | |

## சில முக்கிய ஆபரணங்கள்

| நன்கொடையாளர்கள் | ஆபரணங்கள் | செலவு மதிப்பு |
|---|---|---|
| அரிமளம் செ.சித. | இரத்தின கிரீடம் | ரூ. |
| சிதம்பரம் செட்டியார் | | 45,000 |
| அவர்கள் | | |
| கானாடுகாத்தான், வெ. | தனி அம்மன் | |
| வீர.வெ.அரு. நாகப்ப | இரத்தின கிரீடம் | 30,000 |

| | | |
|---|---|---|
| செட்டியார் வகையறா. | | |
| கோட்டையூர் அ.க.அ.மெ.வெ. குடும்பத்தினர். | தங்க நாகாபரணம் | 25,000 |
| கொத்தமங்கலம் ராம. அரு.வெ. பெத்தாச்சி செட்டியார் அவர்கள். | வைர நெற்றிப்பட்டம் இரண்டு. | 21,000 |
| கோட்டையூர் பெ.க.அ.சித. வீரப்ப செட்டியார் அவர்கள். | சோமாஸ்கந்த மூர்த்திக்கு வைர அபயஹஸ்தம். | 15,000 |
| கானாடுகாத்தான், சா.அ. அண்ணாமலை செட்டியார் அவர்கள். | மூலஸ்தான அம்மனுக்கு தங்க கவசம். | 8,000 |
| கோட்டையூர் அ.க. ராம.மெ.சித. சிதம்பரம் செட்டியார் அவர்கள். | ஸ்ரீ அண்ணாமலையார் மூலஸ்தான வைர நெற்றிப்பட்டம் | 8,000 |
| கொத்தமங்கலம், சி. அ.சி.ராம. ராமன் செட்டியார் அவர்கள். | உத்ஸவ விநாயகர் தங்கக் கவசம் | 7,000 |
| தேவகோட்டை எ.பெரி.கரு.சித். சிதம்பரம் செட்டியார் அவர்கள் குமாரர். | கம்பத்திளையனார் தங்கக் கவசம் | 5,000 |

# சில முக்கிய வாகனங்கள்

| நன்கொடையாளர்கள் | வாகனங்கள் | செலவு மதிப்பு |
|---|---|---|
| இராமச்சந்திரபுரம் தீ.சொ-தீ. நா-தீ.அ. குடும்பத்தினர். | வெள்ளி ரதம் கட்டடம் | ரூ. 1,40,000 |
| கோட்டையூர் பெ.க.அ.சித. வீரப்ப செட்டியார் அவர்களும் நகரத்தார்களும் | சுவாமி தேர் | 55,000 |
| கோட்டையூர் அ.க.அ.மெ. குடும்பத்தினர். | பெரிய வெள்ளி ரிஷபம், கட்டடம். | 45,000 |
| கோட்டையூர் பெ.க.அ.சித. வீரப்ப செட்டியார் அவர்கள் | வெள்ளி பெரிய இந்திர விமானம் | 40,000 |
| கோட்டையூர் பெ.க.அ.சித. வீரப்ப செட்டியார் அவர்கள். | வெள்ளி சின்ன இந்திர விமானம் | 18,000 |
| காரைக்குடி முத்து | வெள்ளி கற்பக | 35,000 |

| | | |
|---|---|---|
| அரு. குடும்பத்தினர். | விருக்ஷம், வெள்ளி காமதேனு, கட்டடம். | 35,000 |
| கானாடுகாத்தான், ச.ராமு.மு. ராம. ராமசாமி செட்டியார் அவர்கள் | அம்மன் தேர் | 20,000 |
| திருவண்ணாமலை கோவிந்தசாமி செட்டியார். | சுவாமி அம்மன் சந்நிதிகளில் ரத விளக்குகள். | |
| தேவஸ்தானம் | மர ரிஷபவாகனம் | |

## 30. திரு அண்ணாமலையார் புகழ்பாடும் நூல்கள்

1. தேவாரம்
2. திருவாசகம்
3. பதினொராந் திருமுறை
4. பெரிய புராணம்
5. கந்தபுராணம்
6. திருப்புகழ்

20. திருவண்ணாமலைத் திருவருட்பதிகம்
21. அருணாசலீசர் பதிகம்
22. அருணாசலேசுவரர் பதிகம் - 2
23. உண்ணாமுலையம்மன் சதகம்.
24. அருணாசலேசர் நவகாரிகை மாலை
25. உண்ணாமுலையம்மன் வருகைப் பதிகம்

7. சோண சைல மாலை
8. திருவருணைக் கலம்பகம்
9. அருணாசலபுராணம்
10. அருணாசல மகாத்மிய வசனம்
11. திருவருணை அந்தாதி
12. அருணகிரி அந்தாதி
13. அண்ணாமலை வெண்பா
14. அண்ணாமலை சதகம்
15. சாரப் பிரபந்தம்
16. கார்த்திகைதீப வெண்பா
17. சோணாசல வெண்பா
18. சோணாசல சதகம்
19. திருவருணைக் கலி வெண்பா
26. அருணாசல சதகம்
27. அருணாசல அட்சர மாலை
28. அண்ணாமலையார் வண்ணம்
29. திருவண்ணாமலைப் பதிகங்கள்
30. அண்ணாமலைப் பஞ்ச ரத்னம்
31. திருவருணைத் தனி வெண்பா
32. அட்சரப் பாமாலை
33. ஸ்ரீ அருணாசலேசுவரர் உயிர் வருக்கம் படைத்தற் பாமாலை
34. அருணாசல அக்ஷர மணி மாலை
35. அருணாசல நவ மணி மாலை
36. அருணாசல பதிகம்
37. அருணாசல அஷ்டகம்
38. அருணாசல பஞ்ச ரத்னம்
இன்னும் பல

கீழ்க்கண்ட விபரப்படியான இத்திருக்கோயிலின் கட்டளை முதலீடு திட்டத்தில் சேர்ந்து பணம் செலுத்துவோருக்கு மேற்படி தொகையிலிருந்து கிடைக்கும் வட்டியிலிருந்து ஆண்டுதோறும் அவர்கள் விரும்பும் ஒரு நாளில் ஸ்ரீ சுவாமி அம்மனுக்கு அபிஷேக ஆராதனை செய்து பிரசாதம் அனுப்புவதுடன்,

கார்த்திகை தீபப் பெருவிழா பத்திரிகையும் தவறாமல் அனுப்பப்படும்.

| | |
|---|---|
| உஷக்கால கட்டளை மூலதன தொகை | ரூ. 8000/- |
| காலசந்தி | ரூ, 6000/- |
| உச்சிக்காலம் | ரூ, 6000/- |
| சாயரக்ஷை | ரூ, 12,000/- |
| இரண்டாங்காலம் | ரூ. 4500/- |
| அர்த்த ஜாமம் | ரூ. 4500/- |

தவிர சேவார்த்திகள் தாங்கள் விரும்பும் நாட்களில் அருள்தரு உண்ணாமுலை உடனுறை அருள்மிகு அண்ணாமலையாருக்கு ஆராதனைகள், அஷ்டோத்ர அர்ச்சனைகள் செய்ய காணிக்கை அனுப்பவும், மணியார்டர்கள், காசோலைகள், டிமாண்ட் டிராப்ட்கள் அனுப்பவும் மற்றும் தங்கும் விடுதிகளுக்கு முன் கூட்டியே பதிவு செய்ய விபரம் கோரவும் தொடர்பு கொள்ளவேண்டிய முகவரி :

உதவி ஆணையர் / நிர்வாக அதிகாரி

அருள்மிகு அருணாசலேசுவரர் திருக்கோயில்,

திருவண்ணாமலை - 606 601.

தி.ச. மாவட்டம்.

சுபம்

